# இந்த அன்பளிப்பு

## இவர்கள் போட்டோகிராபி கலையைத் தொடங்கத் தூண்டிவிடாதா!




## க்ளிக் III






CMAG-119-TAM

உங்கள் செல்வனுக்கும் செல்விக்கும் புகைப்படக்கலையை அறிமுகம் செய்து வையுங்கள். அவர்களுக்கு க்ளிக் III காமிரா வாங்கித்தாருங்கள். இந்தக் காமிராவால் படம் பிடிப்பது மிக மிக சுலபம். கணக்குகள் எதுவும் போட வேண்டாம்; குழம்பித் தவிக்கவும் வேண்டாம். நீங்கள் விரும்பும் காட்சியை ஃபோகஸ் செய்து, 'க்ளிக்' பண்ண வேண்டும், அவ்வளவுதான்! முதல் தடவையிலேயே படம் பிரமாதமாக விழுந்து விடும். ஒவ்வொரு ரோல் பிலிமிலும் சிறப்பாகப் பனிரெண்டு படங்களை எடுத்து மகிழலாம்!

எனவே இந்த விழாக்காலத்தில் உங்கள் அருமைச் செல்வர்களுக்கு க்ளிக் III காமிராவை அன்பளிப்பாகத் தாருங்கள். இந்த அற்புத காமிரா போட்டோகிராபி தொடங்குவதற்கும், தொடர்ந்து படங்களை எடுப்பதற்கும் தலைசிறந்தது!

அதிகாரம் பெற்ற எல்லா ஆக்பா வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.






ஆக்பா மேற்பார்வையின் கீழ் தயாரிப்போர்:
தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா.

ஏகபோக விநியோகஸ்தர்கள்:
ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட் / பம்பாய் • புது டெல்லி
கல்கத்தா • சென்னை

## கல்கி
### பொருளடக்கம்



சௌமிய, ஐப்பசி 17 :: 1969, நவம்பர் 2



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




PK
கடந்த இருபதாண்டுகளாக
நாடு தவறான பாதையில்
சென்றிருப்பதாகக் கருதுகிறார்
திரு காமராஜர்!





பின் சக்கரங்கள் இல்லாத
காரை எப்படி ஓட்டுவாய்?





இது புதுமாதிரிக் கார்.
பிரசார ஜோரைக்
கொண்டே ஓடுகிறது!





கட்சி ஆதரவு



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 29 ★ இதழ் 14



# காமராஜ் ஏற்றுள்ள பணி

காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கும் பிரதம மந்திரிக்கும் சண்டை இன்னும் நடந்து வருகிறது. பிரதம மந்திரியைத் தன் கட்டுத்திட்டத்தில் வைத்திருக்க ஸ்தாபனம் முயலுகிறது. சர்க்காரை நடத்த வேண்டிய பொறுப்பு தம்முடையது மட்டுமே என்று உரிமை கொண்டாடுகிறார் பிரதம மந்திரி. கம்யூனிஸ்டு நாடுகளில் கட்சி ஸ்தாபனம் சர்க்காரை நடத்துகிறது என்றும், அம்மாதிரி ஏற்பாட்டை இங்கு அநுமதிக்க இயலாது என்றும் அவர் கூறுகிறார். இந்தச் சிடுக்கை அறுத்தெறிய காங்கிரஸ் ஸ்தாபனம் முடிவு செய்ய வேண்டும் என்பது என் விருப்பம். கட்சித் தொடர்புகள் இல்லாத பொருளாதார ஆலோசகர்களைக் கொண்ட கவுன்ஸில் ஒன்றைப் பிரதம மந்திரி நியமிக்க வேண்டும் என்ற கோரிக்கையை ஒரு தீர்மானமாக காங்கிரஸ் ஸ்தாபனம் நிறைவேற்ற வேண்டும். நிர்வாகத்தை நடத்துவதில் அந்தக் கவுன்ஸிலின் திடமான புத்திமதியைப் பிரதமர் ஏற்றுக் கொள்ள வேண்டுமென அத்தீர்மானத்தில் கோரலாம். இப்படிச் செய்தால் இன்றைய நிலைமை அடியோடு மாறி விடும். தகராறும் சந்தேகமும் நீங்கி, நல்லிணக்கமும் நம்பிக்கையும் பிறக்கும். மக்கள் அத்தகைய நடவடிக்கையை வரவேற்று நிம்மதி அடைவர்.

காங்கிரஸ் தலைவர் நிஜலிங்கப்பாவும் அவரது நண்பர்களும் உறுதியற்ற நடைமுறையைத் தொடர்ந்து கையாண்டு வருகிறார்கள். அவர்களுடைய உபாயம் எதிர்ப்பு ஏற்பட்டபின் செய்துகொள்ளும் தற்காப்புத் தன்மை வாய்ந்ததே. அது யோசித்துத் திடமாக முடிவு செய்தது அல்ல. ஆனால் பிரதம மந்திரி கையாளும் தந்திரங்கள் அதற்கு நேர் மாறாக இருக்கின்றன. அவை வலுவில் தாக்கும் ரீதியில் உள்ளன. மேலே சொன்னபடி, 'கட்சிச் சார்பற்ற பொருளாதார ஆலோசகர்களின் கவுன்ஸிலைப் பிரதமர் நியமிக்க வேண்டும், அத்தகைய அமைப்பின் புத்திமதியை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்று காங்கிரஸ் தலைவர் உறுதியாக நின்று கேட்பாரானால், இப்போதைய தகராறின் தன்மையே மாறிவிடும். இப்பொழுது நடைபெற்று வரும் தகராறு தனிப்பட்ட வகையில் தலைவர்களிடையே உள்ள போட்டியை அடிப்படையாகக் கொண்டது. அந்த நிலைமை போய்த் தேசிய முக்கியத்துவம் உள்ளதாக விவகாரம் மாறுவதற்கு மேற்சொன்ன தீர்மானம் உதவுமாதலால் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு அது வெற்றி தருவது சாத்தியமே. பொருளாதார ஆலோசகர்களின் கவுன்ஸில் அமைக்கப்பட வேண்டும் என்ற பிரேரணையை மக்கள் ஆதரிப்பர். எனவேதான் இப்படித் தீர்மானம் எடுத்தால் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு நல்லது என்கிறேன். பொருளாதாரப் பிரச்னைகளுக்கு எவ்வித சம்பந்தமுமில்லாமல் ஆதிக்கப் போட்டிக்கான சண்டை நடைபெறுவது மக்களுக்கு அலுத்து விட்டது. ஆதிக்க வேட்டை என்ற நிலை மாறித் தேசிய நலனைப் பற்றிய உண்மையான பிரச்னைகள் விவகார விஷயமானால் மக்கள் பெரிதும் ஆதரவு தருவர்.

* * *

தேசத்தில் ஏற்பட்டு வரும் தார்மிகச் சீரழிவைக் கண்டு திரு காமராஜ் கூட்டங்களில் வருத்தத்துடன் பேசி வருவது குறித்து மகிழ்கிறேன். நாட்டுப் பற்றுள்ள எவருமே நமது தொந்தரவுகள் அனைத்துக்கும் அடிப்படையாக இருப்பது இந்த அறச் சிதைவு தான் என்பதை உணராதிருக்க முடியாது. நமது முன்னேற்றத்துக்கு இதுவே மிகப் பெரிய முட்டுக்கட்டை. காமராஜ் ஒரு பெரிய பணியை ஏற்றுக் கொண்டிருக்கிறார். ஆண்டவன் து

அருளாசி அவருக்குக் கிடைக்கட்டும் என்பதே என் பிரார்த்தனை.

பெர்மிட் — லைசென்சு ஆட்சி முறையை அரசாங்கம் தைரியமாக ரத்து செய்தால்தான் தார்மிக மறுமலர்ச்சி ஏற்பட இயலும். சர்க்காரிடமிருந்தோ அல்லது அதன் அதிகாரிகளிடமிருந்தோ அநுமதியைப் பெற்றாக வேண்டும் என்ற அவசியத்தினின்று வணிகத் துறையையும் தொழில் துறையையும் விடுவித்தாக வேண்டும். அது கைகூடாத வரை மக்களிடையே ஒழுக்க உயர்வு ஏற்படும் என்று நம்புவதற்கு இடமில்லை. நோயின் மூலகாரணத்தை அகற்றினால்தான் அதைக் குணமாக்க முடியும். சர்க்காரின் உதவியுடனும், அரசியல் தயவின் மூலமாகவும் பல சிறிய, பெரிய ஏகபோகங்கள் சிருஷ்டியாகி உள்ளன. இவை எவ்வாறு அடையப் பெற்றன என்பதை எல்லோரும் அறிவர். இந்த ஏகபோகங்களெல்லாம் மறைந்தொழிய வேண்டியவையே.

* * *

இப்போதைய சூழ்நிலை படுமோசமானது. இதற்குப் பதிலாக எல்லோருக்கும் சம வாய்ப்பு அளிக்கின்ற புதிய சூழ்நிலை ஏற்பட்டாக வேண்டும். இப்போதைய நிலவரம் சோஷலிஸத்துக்குத் துளிக்கூட இசைவில்லாதது. பாபம் செய்யலாகாது என்ற பயம் முன்னர் இருந்தது. அதனிடத்தைப் பணப் பேராசை வந்து பிடித்துக் கொண்டு விட்டது. நிலைமை மிகவும் சீர்கெட்டுவிட்டது. ஆண்டவனின் அருளை நாடி விமோசனத்துக்காகப் பொறுமையுடன் காத்திருக்க வேண்டியதுதான்.

பெர்மிட் — லைசென்சு முறையின் மூலம் காங்கிரஸ் கட்சி தொழிலதிபர்களிடமிருந்து ''நன்கொடை'' வசூலிக்க முடிகிறது. இம்மாதிரி வசூலிக்கும் அதிகாரத்தில் தங்களுக்கும் பங்கு வேண்டும் என்று ராஜ்ய சர்க்கார்கள் விரும்புவது இயற்கையே. லைசென்ஸ் வழங்குவதற்கான அதிகாரம் மேலும் பரவும் பட்சத்தில் ஊழல் அதிகரிக்கவே செய்யும். ஊழலும் எல்லாத் துறைகளிலும் காணப்படும் தார்மிகச் சீரழிவும் பெரிய நோய்கள். அவை போவதற்கு ஒரே ஒரு பரிகாரந்தான் உண்டு. அந்த அற்புத மருந்துதான் பெர்மிட்—லைசென்ஸ் முறையின் ஒழிப்பு. லைசென்ஸ் தரும் அதிகாரத்தைக் கைவிடாமல், பரவலாகப் பகிர்ந்து கொண்டால் வியாதி முன்னைவிட முற்றத்தான் செய்யும்.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

பழைய சம்ஸ்தான மன்னர்கள் தங்கள் ராஜ்யங்களை இந்திய யூனியனுக்குக் கொடுத்த போது, அவர்களுக்கு ராஜ மானியம் அளிப்பதாக ஒப்பந்தம் செய்யப்பட்டது. ராஜ மானியம் தரப்படும் என்ற வாக்குறுதியின் மீதே அவர்கள் ராஜ்யத்தைத் தந்தனர். இது இந்திய அரசாங்கம், முன்னாள் மன்னர்கள் ஆகிய இரு தரப்பாரும் செய்து கொண்ட ஒப்பந்தம். இந்த ஒப்பந்தம் அரசியல் சாஸனத்திலும் சேர்க்கப்பட்டது. ஒப்பந்தத்தைக் கைவிடும் அபாயம் ஏற்படக் கூடாது என்பதற்கு ஒரு காப்பாகவே இவ்வாறு சாஸனத்தில் சேர்க்கப்பட்டது. ஒப்பந்தம் வேறு: சாஸன ஷரத்து என்பது வேறு. சாஸனத்துக்குத் திருத்தம் கொண்டு வருவதன் மூலம் அது கூறும் ராஜ மானிய ஷரத்தை நீக்கி விடலாம். ஆனால் இது காரணமாக இந்திய சர்க்காரும் மன்னர்களும் செய்துகொண்ட ஒப்பந்தம் ரத்தாகி விடாது. ஒப்பந்தம் இருப்பதற்கு ஒரு சாட்சியமே சாஸன ஷரத்து. எனவே, சாஸனத்தைத் திருத்தினாலும் ஒப்பந்தம் என்பது எப்போதுமே சம்பந்தப்பட்ட தரப்பினரைக் கட்டுப்படுத்தி வரும்.

இந்தச் சட்ட விஷயம் ஒருபுறம் இருக்கட்டும். தேசம்தானாகட்டும், தனிமனிதர் தானாகட்டும், நம்பிக்கைக்கு உகந்த தன்மையை இழக்க முற்படலாமா? திவாலா போட்டு விட்டவர்கள் பண ஒப்பந்தங்களின் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலை பெறலாம் என்பது வாஸ்தவம். அவ்வாறாயின், இப்போது ஒப்பந்தத்தை மறுக்கிறவர்கள் தமது திவாலா நிலையை ஒப்புக்கொள்ள வேண்டும். இரு தரப்பில் ஒருவர் தமது பங்கை நிறைவேற்றியபின் மற்றவர் தாம் தந்த பிரதிக்ஞையை முறித்தால் அதன்பின் கௌரவம் எப்படி வாழும்?

★

பார்லிமெண்டில் அங்கம் வகிக்கும் சுதந்திரக் கட்சி முக்கியஸ்தர்கள், கேரள சர்க்கார் விழுந்தது பற்றிக் கீழ்க்கண்ட அறிக்கை விடுத்துள்ளனர்:

> பிளவை வளர்க்கும் சக்தியான இடது சாரியினர் கேரளத்தில் தங்களது சதிகளுக்குத் தாமே ஆளாகி விழுப்பதில் ஆச்சரியமில்லை. சட்டசபையில் பரஸ்பரம் குறை கூறிக் கொண்டு மூன்று நாட்கள் நடைபெற்ற விவாதத்திலிருந்து கம்யூனிஸ்ட் ஆட்சியில் எத்தகைய ஊழல்கள் விளைய முடியும் என்று அம்பலமாயிற்று. தேசிய விரோதமான, சமூக விரோதமான கருத்துக்களைப் பகிரங்கமாக ஊக்கி வந்த நம்பூதிரிபாடு மந்திரிசபை விலகியதை அடுத்து, ஜனநாயக சட்டசபை நிர்வாகங்களிலும் சட்டத்தின் ஆட்சியிலும் நம்பிக்கையுள்ள அரசியல் சக்திகள் வலுப்பெறும் என நம்புகிறோம். கேரளத்தின் அறிவுடைய மக்கள் விழிப்புடன் இருந்து, ஜனநாயகக் கோட்பாடுகளின் மீதமைந்த சர்க்கார் ஏற்படுவதற்கு உதவுவர் என நம்புகிறோம்.

# அமர நிலையில் திளைக்கும் அதிசய புருஷர்

அடையாறு கடற்கரையில் தம்பியுடன் விளையாடிக் கொண்டிருந்தான் சிறுவன் ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி. அவனைச் சுற்றி இனம் தெரியாத ஒரு மென்மை, தண்மை, அமைதி.

பிரம்மஞான சபையின் நூல் நிலைய அலுவலர் வான் மானெனின் கவனத்தை ஈர்த்தான் கிருஷ்ணமூர்த்தி. அவர் அவனை பெஸண்ட் அன்னையாரிடம் அழைத்துச் சென்றார். அச்சிறுவனின் உள்ளார்ந்த பெருமை அம்மையாருக்குப் புலப்பட்டது. உலகை உத்தாரணம் செய்வதற்காக ஒரு மகாசக்தி வெளிப்படப் போகிறது என்று அந்த அம்மையார் தீவிரமாகக் கருதி வந்த காலம் அது. அந்த மகாசக்தியின் வெளியீட்டுக்குக் கிருஷ்ணமூர்த்தியே உகந்த கருவி என்று அவருக்கு உறுதி உண்டாயிற்று.

பிரம்ம ஞான சபை எஸ்டேட் சூப்பிரண்டாக இருந்த நாராயணய்யாவின் புதல்வரே கிருஷ்ணமூர்த்தி என்று அன்னை பெஸண்ட் அறிந்தார். அவரிடமிருந்து, கிருஷ்ணமூர்த்தியை வளர்த்துக் கற்பித்து ஆளாக்குகிற பொறுப்பைப் பெற்றார் அம்மையார். இங்கிலாந்தில் கிருஷ்ணமூர்த்திக்குக் கல்வி அளிக்கப்பட்டது.

ஆனால் கிருஷ்ணமூர்த்தியைப் பொறுத்த வரையில் கல்வி என்பது வெளியில் எங்கிருந்தோ அளிக்கப்பட்டுக் கற்கிற விஷயமாக இல்லை. அநுதினமும் சாட்சாத்தாக அநுபவிக்கப்படும் சத்திய தரிசனமே அவருக்குக் கல்வியும் கல்விப் பயனுமாய் இருந்தது.

'அநுதினமாவது, சாட்சாத்தாவது, சத்தியத்தை அநுபவிப்பதாவது? இந்த அசத்திய உலகில் இது சாத்தியமா' என்றே தோன்றும். ஆனால் பூர்வ ஸம்ஸ்கார விசேஷமோ, அல்லது ஈசுவரானுக்ரக பலமோ — குழந்தைப் பருவத்திலிருந்தே கிருஷ்ணமூர்த்தி சத்திய நிலையில் அநாயாசமாக நிலைத்திருந்தார். பூஞ்சையான, பயந்த பள்ளிப் பிள்ளையாக இருக்கும் போதே அவ்வப்போது தம்மை மறந்து சத்தியானுபவச் சூழலில் ஆழ்ந்து விடுவார்.

நினைவு என்கிற சுமை, கருத்து என்கிற பாரம், மரபு என்கிற பளு இவை ஏதுமே இல்லாமல் வெட்டவெளிபோல் உள்ளத்தை ஆக்கிக் கொண்டால், அப்போதைக்கப்போதே சத்தியத்தை, அழகை, அன்பை, அமர வாழ்வை அநுபவிக்கலாம் என்று கண்டவர் கிருஷ்ணமூர்த்தி. விஷயம், விஷயத்தை அறிபவன் என்ற இடைவெளியை அழித்து அந்தந்த நிமிடமும் பூரணமாக மனத்தை எதனிடம் ஈடுபடுத்தினாலும் அதுவே சத்திய நிலை என்று கண்டார்.

அவர் மூலம் மகாசக்தியின் ஒளியைப் பரப்புவதற்காக அன்னை பெஸண்ட் 'கிழக்குத் தாரகை' என்ற இயக்கத்தைத் தொடங்கியிருந்தார். ஆனால் அவரோ இயக்கம், இயக்குபவர், இயக்குவிக்கப் படுபவர் என்பதெல்லாமே பொருளற்றவை எனக் கருதினார். அவரவரும், அவ்வப்போதும் உள்ளத்தில் பரிபூரணமான ஈடுபாடு கொண்டால் அதுவே உண்மை வாழ்வு; இந்த ஈடுபாட்டை வெளி விஷயங்களால் — சமயத்தால், சம்பிரதாயத்தால், ஆசாரத்தால், ஆசாரியரால் — ஏற்படுத்த முடியாது என்று கருதினார். எனவே, மகாசக்தியின் அவதாரம் என்கின்ற மாபெரும் அந்தஸ்தையும் அநாயாசமாகத் தியாகம் செய்து விட்டார். 'கிழக்குத் தாரகை'யைக் கலைத்து விட்டார்.

அதிலிருந்து அவரது வரலாறு அநுபூதியின் வரலாறாக, அன்பின் வரலாறாக, அமைதியின் வரலாறாக உள்ளது.

தற்போது எழுபத்திநான்காம் பிராயத்திலுள்ள கிருஷ்ணஜி (ஜே. கிருஷ்ணமூர்த்தி அவர்களை அன்பர்கள் இப்படித்தான் அழைப்பர்) கடந்த பலப்பல ஆண்டுகளாக உலக நாடுகள் எங்கும் சஞ்சரித்து, உண்மை, சத்தியத்தை எளிமையான, இனிமையான முறையில் எடுத்தியம்பி வருகிறார்.

சகல நினைப்புக்களையும் துறந்து, மனத்தை வெட்டவெளியாக்கிப் பூரண உயிர்ப்புடன் சத்தியத்தோடு சத்தியமாக — அன்போடு அன்பாக — சாந்தியோடு சாந்தியாக இழைந்திருக்கிற நிலையில் சமயம், குரு, சம்பிரதாயம் இவை யாவும் அநாவசியமே. ஆனால் அந்த நிலையிலிருந்து வெகு தூரத்திலுள்ளவர் நாம். என்றாலும், அவர் சொல்கிற இந்த மகோன்னத நிலையின் நினைவு நமக்கு நீங்காமல் இருந்தேயாக வேண்டும். அதை நினைவுபடுத்துகிறவரும் நமக்கு ஒரு வரப்பிரசாத புருஷராவார். கிருஷ்ணஜி சத்திய நிலையை வார்த்தையால் மட்டும் நினைவுபடுத்தவில்லை; தம் வாழ்க்கையாலேயே நினைவுபடுத்துகிறார். இமயத்தைப் பார்க்கின்ற நாம் இமயமாக ஆக முடியாமல் போகலாம்; எனினும் இமயத்தைக் கண்டு நம் மனம் பூரிக்கிறதல்லவா? உணர்வில் இமயம் கிருஷ்ணஜி.

லௌகிகத்தின் அடிமட்டத்தில் ஆழ்ந்துள்ள காலம் இது. எனவே மனிதனின் உள்ளார்ந்த மாண்பை உணர்த்தும் கிருஷ்ணஜியின் கருத்துக்களைப் பரப்ப வேண்டிய அவசியத்தைச் சில பெரு மக்கள் உணர்ந்து, ''கிருஷ்ணமூர்த்தி கேந்திரம்'' (Krishnamurti Centre) ஒன்றை நடத்தி வருகிறார்கள். மாணவர்கள் சிந்தனையைப் பசுமையாக வைத்துக் கொண்டு இயற்கையின் மடியிலே தத்துவங்களையும், சிற்பம், சித்திரம், சங்கீதம், நாடகம் முதலியவற்றையும் புது முறைக் கல்வித் திட்டத்தில் பயிலுவதற்குப் பள்ளி எழுப்புவது கேந்திரத்தின் முக்கியப் பணிகளில் ஒன்று.

பல உத்தம இலட்சியங்களுக்கு இசையால் பணி செய்துள்ள சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள், 'கிருஷ்ணமூர்த்தி கேந்திரத்'தின் பொருட்டு நவம்பர் முதல் தேதி (சனிக்கிழமை) மாலை ஆறு மணிக்குச் சென்னை சர்வகலாசாலை நூற்றாண்டு மண்டபத்தில் உதவிக் கச்சேரி வழங்குகிறார். ஐ. நா. சபையின் பிரதம அதிகாரி (Chef de Cabinet) யாக விருக்கும் ஸ்ரீ ஸி. வி. நரஸிம்மன் அவர்கள் முன்னிலையில் கச்சேரி நடக்கிறது. இச் சந்தர்ப்பத்தில் கிருஷ்ணஜியின் திரு உருவத்தை மகிழ்ச்சியுடன் அட்டையில் வெளியிடுகிறோம்.

# துறவியானார்!

**வா**க்கில் வறிய உண்மை இறுகி ஏதோ ஒரு விநாடியில் வாழ்க்கையாகி விடுகிறது. அறிவில் வறிய தத்துவம் முறுகி ஏதோ விநாடியில் அநுபவமாகி விடுகிறது. அந்த 'ஏதோ ஒரு விநாடி' அருமையிலும் அருமையாக எவரோ ஒருவருக்குத்தான் வாய்க்கிறது. செங்காலிபுரம் தீக்ஷிதரவர்கள் அப்படிப்பட்ட அருமையிலும் அருமையான ஒருவராகி விட்டார். வாழ்க்கையின் உட்பொருள் வாழ்க்கையைத் துறக்கும் சந்நியாசத்திலேயே உள்ளது என்ற உண்மையை நீண்ட நெடுங்காலமாக உபதேசித்து வந்துள்ள அவர், இன்று அந்த உபதேசத்துக்குத் தாமே பாஷ்யமாகி விட்டார்.

அடையாறு வி. ஹெச். எஸ். மருத்துவமனையில் ஏழு வாரங்களாக சிகித்ஸை பெற்று வந்த தீக்ஷிதர், அக்டோபர் 21ந் தேதி, ஏகாதசி புண்ணிய தினத்தன்று ஓர் அற்புதமான திடசங்கற்பம் கொண்டார்.

உடல், உடல் நோய், சிகித்சை இவற்றிலிருந்து மனத்தை அப்படியே விடுவித்து விட்டார். 'இனி எனக்கு மருந்தும் பாயமும் வேண்டாம்' என்றார். சிகித்ஸை அளிக்க வந்த மருத்துவர்களைத் திருப்பி அனுப்பினார். 'சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போகிறேன்' என்று அழுத்தமாகக் கூறினார்.



அந்திம காலத்தில் 'ஆபத் சந்நியாசம்' என்று வாங்கிக் கொள்வதுண்டு, துறவியாகித் தேக வியோகமாவது புண்ணியம் என்ற கருத்தில். ஒரு வேளை தீக்ஷிதேந்திரர்களும் இப்படித்தான் எண்ணி விட்டாரோ என உறவினர் நினைத்தனர். பிற்பாடு உடல் குணமானால் அவர் இல்லத்தையும் செல்வத்தையும் துறந்து வாழ நேருமே என்பதை அவர் எண்ணிப் பார்த்தாரோ என சம்சயித்து அவரிடமே கேட்டனர். ஆனால் மெலிந்த உடலிலும் தளராத உறுதியோடு அவர், வியாதி, மரணம், இவற்றை நினைத்துத் தாம் சந்நியாசம் மேற்கொள்ளவில்லை என்பதையும், சந்நியாசியாக வேண்டும் என்பதற்காகவே துறவறம் ஏற்பதையும் தெளிவு செய்தார். முற்றிலும் சத்தியமான வார்த்தை. ஏனெனில், எவ்விதமான உடல் உபாதையும் இன்றி, அவர் சொஸ்தமாக இருந்த போதே, இரண்டாண்டுகளுக்கு முன்னமே சேலத்தருகே தமது சமாதிக்கென ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்து வைத்து விட்டார்! கடைசிக் காலத்தில் துறவறம் மேற்கொண்ட மூதாதை முத்தண்ணாவின் ரத்தம் அல்லவா அவர் மேனியில் ஓடுவது?

வேதவித்துக்களை வரவழைத்தார். மந்திரங்களை ஓதச் சொன்னார். தாமும் திரும்பச் சொன்னார். அவர்கள் தயங்கிய இடத்தில் தாமே எடுத்துக் கொடுத்தார். நினைவு வருவதும் தப்புவதுமாக இருந்த அவருக்கு இவ்வளவு திடமான பிரக்ஞை உண்டானதே அதிசயம்!

மலை போன்ற மேனியில் சிற்றருவி போல் ஓடும் புனிதப் பூணூல் அறுந்தது! புன்சிரிப்பு மாறாத முகத்தில், காதுகளில் புன்னகை புரியும் கடுக்கன் கழற்றப்பட்டது. துவராடை உடலை அணைந்தது. தண்டமும் வந்தது கைமாட்டில். பிரணவ ஜபம் தொடங்கி விட்டார் புதிய சந்நியாசி.

'சிகித்சை வேண்டாம்' என்றபின் மருத்துவ மனையில் இருக்க வேண்டியதில்லையன்றோ? இனி இல்லம் அவருடையது அல்ல; இல்லத்தினரைத் தம்மவராக அவர் எண்ணவும் இல்லை. எனினும் மிகவும் சுகவீனமுற்ற நிலையில் அவரைச் சேலத்தில் இல்லத்துக்கு அழைத்துச் செல்வதே யுக்தம் எனக் கருதி, அதற்கு அநுமதி கேட்டார், அவரது 'குடும்பத்தினரில் ஒருவராகி விட்ட ஸ்ரீ எஸ். ஜி. ரத்தினம் அய்யர். அவரும் தயவுடன் சம்மதம் தந்தார். எனினும் சுசுரூஷை செய்ய உறவினரை அநுமதியாமல், சீடர்களுக்கே அநுமதி தந்தார். 'மாமா' என்று யாரோ உறவு முறை சொல்லி அழைத்தார்கள். 'மாமா இல்லை; ராமா என்று சொல்' என்றார்.

சேலத்துக்குப் புறப்படுகிற சமயம். இனி உபந்நியாஸக அனந்தராம தீக்ஷிதராக அவர் சென்னை திரும்ப மாட்டார் என்று அனைவரும் உருகிய சமயம். தீக்ஷிதர் அவர்களின் ஆசிர்வாதத்துக்கு மிகவும் பாத்திரமாகியுள்ள ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் மனம் நெகிழ்ந்து அவருக்கு மிகவும் விருப்பமான சில பாடல்களைப் பாடினார். 'மரிப்போரின் செவியில் எந்த ராமனின் பெயரைச் சிவபெருமான் காசியில் மொழிகிறாரோ, அந்த ஏகனை, பரமனை, தாரகப் பிரம்மனை வணங்குகிறேன்' என்ற ஆதிசங்கரரின் சுலோகத்தைப் பாடுகையில் உணர்ச்சிப் பெருக்கில் 'பரமனை' என்ற இடத்தில் தடைப்பட்டது. 'பரம்' என்று பளிச்சென எடுத்துக் கொடுத்தார் துறவி. மிகவும் நோயுற்ற தருணத்தில் அந்திம சமயம் பற்றிய சுலோகத்தைக் கேட்பதால் ஏற்படக்கூடிய கலக்கத்தின் சாயல்கூட இல்லை. எதற்கும் தயாராகிவிட்ட விரக்தி!

"ஏதேனும் சொல்ல வேண்டுமெனத் தோன்றுகிறதா?" என்று பரிந்து பரிந்து கேட்டார் ஸ்ரீ சதாசிவம்.

"தோணல்லே" என்று நிச்சலனமாகக் கூறி விட்டார் சந்நியாசி.

மனிதத் தன்மைக்கும் வாஞ்சைக்கும் பெயரெடுத்த தீக்ஷிதரவர்கள் பற்றற்ற துறவு நிலையை மனமார ஏற்ற நெகிழ்ச்சி தரும் நிகழ்ச்சி இன்றைய பாப உலகில் மறக்கவொண்ணாத புண்ணிய சம்பவமாகும்.

# பொன்னியின் செல்வன்



அமரர் கல்கி

மூன்றும் அத்தியாயம்

## ஆந்தையின் குரல்

நந்தினி கடலை நோக்கினாள். பழுவேட்டரையர் ஏறிச் சென்ற படகு பார்த்திபேந்திரனுடைய கப்பலை நெருங்கிக் கொண்டிருந்தது.

நந்தினி பெருமூச்சு விட்டாள். அது பார்த்திபேந்திரனுடைய நெஞ்சில் புயலாக அடித்தது.

''தேவி, சொல்லுங்கள். நான் செய்ய வேண்டியது இன்னதென்று சொல்லுங்கள். தங்களுக்கும் எனக்கும் உகந்தது என்று பிரித்துச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. தங்களுக்கு எது உகந்ததோ அதுதான் எனக்கும் உகந்தது!'' என்றான் பல்லவ வீரன்.

அவன் மனத்தில் விசித்திரமான எண்ணங்கள் எல்லாம் அந்நேரத்தில் உதித்தன. இந்தப் பெண் அந்தக் கொடிய கிழவனிடம் அகப்பட்டுக் கொண்டு கூண்டுக் கிளியைப் போல் தவித்துக் கொண்டிருக்கிறாள் என்பதில் சந்தேகமில்லை. அந்தக் காட்டுப் பூனையிடமிருந்து இவளை ஏன் விடுதலை செய்யக் கூடாது? இவள் மட்டும் தன் விருப்பத்தைத் தெரிவிக்கட்டும்! அவனை அக்கப்பலிலேயே சிறைப்படுத்திக் கண் காணாத தேசத்துக்குக் கொண்டு போய் விட்டுவிடச் செய்யலாம்! சண்டாளன்! புதல்வியும் பேத்தியுமாக இருப்பதற்குரிய இளம் பிராயமுள்ள பெண்ணை மனைவியாக்கிக் கொள்ள எப்படி இவன் மனம் துணிந்தது?...

நந்தினி இன்னமும் படகையும் கப்பலையும் பார்த்துக் கொண்டிருந்தாள். படகிலிருந்து பழுவேட்டரையர் கப்பலில் ஏறுவதைப் பார்த்தாள்.

''நல்ல வேளை! பத்திரமாக ஏறி விட்டார்! எவ்வளவு வீரராக இருந்தாலும் வயதாகிவிட்டதல்லவா? படகிலிருந்து கப்பலில் ஏறும்போது தடுமாறாமல் இருக்க வேண்டுமே என்று எனக்குக் கவலையாயிருந்தது!'' என்றாள்.

பல்லவன் ஏமாற்றமடைந்தான். கிழவனிடம் இவளுக்கு இவ்வளவு பரிவு ஏன்? படகிலிருந்து அவன் கடலில் விழுந்து இறந்தால்தான் என்ன? நாட்டுக்கும் க்ஷேமம்; இவளுக்கும் விடுதலை! எதற்காக இவ்வளவு பரிவுகாட்டுகிறாள்?

''கிழவருக்குச் சோழ குலத்தாரிடம் எவ்வளவு அபிமானம் என்பது இன்றைக்குத்தான் எனக்குத் தெரிந்தது. இளவரசருக்கு ஆபத்து என்றதும் எப்படித் துடிதுடித்துப் போய்விட்டார்? ஐயா! இளவரசர் தப்பிப் பிழைத்திருக்கக் கூடுமல்லவா? இறந்துதான் போயிருக்க வேண்டும் என்பது நிச்சயம் இல்லையே?'' என்றாள் நந்தினி.

''நிச்சயம் இல்லை; ஆனால் அப்பேர்ப்பட்ட சுழற் காற்றில் கடலில்

குதித்தவர் பிழைத்திருப்பது அசாத்தியம்! விதியின் போக்குக்கு நாம் என்ன செய்ய முடியும்?'' என்றான் பல்லவன்.

''இதற்கு விதி காரணம் இல்லை. அந்தப் பழையாறை ராட்சஸியின் பேராசைதான் காரணம். தங்களுக்குத் தெரியுமா ஐயா? குந்தவை தேவிக்கு ஜோதிடத்திலும் ரேகை சாஸ்திரத்திலும் அபார நம்பிக்கை. தம்பியின் ஜாதகத்தையும் கைரேகையையும் பார்த்து வைத்துக் கொண்டு அவன் மூன்று உலகையும் ஆளும் சக்கரவர்த்தியாகப் போகிறான் என்ற நம்பிக்கை வைத்திருந்தாள். ஐயோ பாவம்! அந்த அருமைத் தம்பிக்கு இந்தக் கதி நேர்ந்தது என்று அறியும்போது அவள் எவ்வளவு கஷ்டம் அடைவாள்! அச்சமயம் நான் அவள் கூட இருந்து ஆறுதல் சொல்ல வேண்டும் போலிருக்கிறது!''

இவ்விதம் கூறிய நந்தினியின் குரலில் குதூகலம் தொனித்தது. பல்லவன் ஒரு கணம் ஆச்சரியப்பட்டுப் போனான். பிறகு தன் செவிகளில்தான் கோளாறு என்று தீர்மானித்துக் கொண்டான்.

''ராணி! தாங்கள் எதற்காக ஆறுதல் சொல்ல வேண்டும்? அவளுடைய பேராசையினால் நேர்ந்து விட்ட விபரீதம்தானே இது? அதற்காக அவள் கஷ்டப்பட வேண்டியதுதான்...''

''அது எப்படி ஐயா? அவள் கண்ணில் ஒரு சொட்டுக் கண்ணீர் துளித்தால் நெஞ்சு பதறுகின்றவர்கள் சோழ நாட்டில் ஆயிரம் பதினாயிரம் பேர் இருக்கிறார்கள். அவள் சக்கரவர்த்தியின் செல்வப் புதல்வி. மூன்று உலகிலும் ஈடு இணையற்ற அழகி!''

''நானும் ஒருசமயம் அவ்வாறுதான் நினைத்திருந்தேன்; அதாவது தங்களைப் பார்ப்பதற்கு முன்னால்!''

''என்னைப் பார்த்த பிறகு என்ன நினைக்கிறீர்கள்?''

''குந்தவை தேவியின் அழகு தங்கள் பாதச் சுண்டு விரலின் அழகுக்கு இணையாகாது என்றுதான்.''

''இப்போது இப்படித்தான் சொல்லுவீர்கள். நாளைக்கு அவளைப் பார்த்தால் நான் ஒருத்தி இவ்வுலகில் இருக்கிறேன் என்பதையே மறந்து விடுவீர்கள்!''

''ஒரு நாளும் மாட்டேன், தேவி! என்னைச் சோதனை செய்து பாருங்கள் என்றுதான் சொல்கிறேனே? தங்கள் கட்டளை இன்னதென்று இக்கணமே தெரிவியுங்கள்.''

''கட்டளையிடும் பாத்தியதை எனக்குக் கிடையாது, ஐயா! விண்ணப்பம் செய்து கொள்கிறேன். பெரிய பழுவேட்டரையரை நான் மணந்த பிறகு சோழ நாட்டில் பிளவும் குழப்பமும் ஏற்பட்டிருப்பதாகச் சிலர் அவதூறு சொல்கிறார்கள். அது பொய் என்பதை நிரூபிக்க விரும்புகிறேன். அதற்குத்தான் தங்கள் உதவியை நாடுகிறேன்.''

**பா**ர்த்திபேந்திரன் சிறிது ஏமாற்றம் அடைந்தான். நந்தினி அவளுக்காக ஏதோ ஒரு கஷ்டமான காரியத்தில் தன்னை ஏவுவாள் என்று எண்ணியிருந்தான். அதை நிறைவேற்றி அவளை மகிழ்விக்க ஆர்வம் கொண்டிருந்தான். ஆனால் அவள் ராஜ்ய காரியத்தைப் பற்றி எதுவோ சொல்கிறாள்!

''சொல்லுங்கள், ராணி! தங்கள் விருப்பம் எதுவாயிருந்தாலும் சொல்லுங்கள்!'' என்றான்.

''ஐயா! சோழ நாட்டில் அமைதி ஏற்படாமல் தடுத்து வந்தவள் இளைய பிராட்டி. அவளுடைய அகம்பாவத்தினால் சோழ நாட்டுச் சிற்றரசர்களையும் பெருந்தர அதிகாரிகளையும் கோபம்



கொள்ளச் செய்தாள். தம்பி அருள்மொழி வர்மனை எப்படியாவது இந்தச் சோழ நாட்டுச் சிம்மாசனத்தில் ஏற்றி விடவேண்டும் என்று அவளுக்கு ஆசை. இதனால் சமரசம் ஏற்படாமல் தடுத்து வந்தாள். இப்போது அந்தக் காரணம் போய்விட்டது. இனிமேல் சமரசம் செய்து வைப்பது சுலபம். கேளுங்கள் ஐயா! தாங்கள் தான் சொன்னீர்களே! மந்திரிகளும் மற்றப் பெருந்தர அதிகாரிகளும் சுந்தர சோழருக்குப் பிறகு மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட விரும்புகிறார்கள். சக்கரவர்த்தியும் அதற்கு இணங்கி விட்டார்.''

''அப்படியா, தேவி!''

''ஆம், ஐயா! இல்லாவிடில் இளவரசரைச் சிறைப் படுத்திக் கொண்டு வரக் கட்டளையிட்டிருப்பாரா? ஆனாலும் அது சரியல்ல என்பது என் கருத்து. சமரசமாகத் தீர்த்துக் கொள்வதற்கு இடம் இருக்கிறது. வெள்ளாற்றுக்கு வடக்கேயுள்ள ராஜ்யத்தை ஆதித்த கரிகாலருக்கு என்றும், தெற்கேயுள்ள பகுதியை மதுராந்தகருக்கு என்றும் பிரித்துக் கொள்ளலாமே? தங்கள் முன்னோர்கள், பல்லவ மகா சக்கரவர்த்திகள் தொண்டை மண்டலத்தை ஆள்வதுடன் திருப்தி அடையவில்லையா? பூர்வீக சோழ மன்னர்கள் இரண்டு வெள்ளாற்றுக்கு மிடையே உள்ள ராஜ்யத்துடன் திருப்தி யடையவில்லையா?....''

''தேவி! இதையெல்லாம் எதற்காக என்னிடம் சொல்லுகிறீர்கள்? எந்த ராஜ்யம் எப்படிப் போனால் எனக்கு என்ன? யார் எந்த ராஜ்யத்தை ஆண்டால்தான் எனக்கு என்ன?...''



''ஐயா! தாங்கள் ஆதித்த கரிகால ரிடம் உண்மை விசுவாசமுள்ள சிநேகிதர் என்று எண்ணினேன்.''

''பிறருக்கு விசுவாசமாக இருந்து, பிறருடைய புகழுக்காகப் போராடி, பிறருடைய நன்மைக்காக உழைத்து— இத்தனை நாளும் கழித்தாகி விட்டது. இனிமேல் எனக்காக நான் வாழ விரும்புகிறேன். ராணி! இதைக் கேளுங்கள்! நான் எதற்காக இவ்வுலகில் பிறந்தேன், எதற்காக உயிரோடிருக்கிறேன் என்று பலதடவை நான் சிந்தித்ததுண்டு. என் முன்னோர்களாகிய பல்லவ சக்கரவர்த்திகள் பெரிய சாம்ராஜ்யங்களை ஆண்டார்கள். மாமல்லபுரத்தைப் போன்ற சொப்பன உலகங்களைச் சிருஷ்டித்தார்கள். அவர்களுடைய பெருமையை என் காலத்தில் மீண்டும் நிலைநாட்டப் பிறந்திருக்கிறேனோ என்று நான் எண்ணியதுண்டு. ஆனால் அதில் என் மனம் ஈடுபடவில்லை; ராஜ்யங்களைச் சிருஷ்டிப்பதில் உற்சாகம் கொள்ளவில்லை. சோழ குலத்தின் பெருமைக்கு உழைப்பதிலேயே திருப்தி யடைந்தேன். ஆதித்த கரிகாலரின் சிநேகத்தில் மகிழ்ந்தேன். இப்படியே என் வாழ்நாளைக் கழித்து விடுவது என்றுதான் எண்ணியிருந்தேன். இன்றைக்குத்தான் என் கண்கள் திறந்தன; சற்று முன்னாலேதான் நான் பிறந்தது எதற்காக என்று தெரிந்தது. அதோ கேளுங்கள். அந்தக் கடல் அலைகளின் குரல் என் உள்ளத்தின் குரலை 'ஆம், ஆம்' என்று ஆமோதிக்கிறது. அதோ காட்டில் வாழும் பறவைகள் எல்லாம் 'சரி சரி' என்று கூவுகின்றன. தேவி! சோழ சாம்ராஜ்யத்தைப் பங்கு போடுவது பற்றி என்னிடம் சொல்ல வேண்டாம். வேறு ஏதாவது சொல்லுங்கள்! கடல்களுக்கப்பாலுள்ள பவழத் தீவிலிருந்து விலை மதிக்க முடியாத பவழங்களைக் கொண்டு வரச் சொல்லுங்கள். ஆழ் கடலின் அடியிலிருந்து முத்துக்களைக் கொண்டு வரச் சொல்லுங்கள். மேரு மலையின் உச்சிச் சிகரத்திலே ஏறிச் சஞ்சீவி மூலிகையைக் கொண்டு வரச் சொல்லுங்கள். மேக மண்டலத்துக்கு மேலே பறந்து நட்சத்திரங்களைப் பறித்துக் கொண்டு வந்து ஆரம் தொடுத்துத் தங்கள் கழுத்தில் போடச் சொல்லுங்கள். பூரணச் சந்திரனைக் கொண்டு வந்து தங்களுடைய முகம் பார்க்கும் கண்ணாடியாக்கித் தரும்படி சொல்லுங்கள்!....''

''போதும் ஐயா, போதும்! என்னை ஏற்கனவே அந்தப் பழையாறைப் பிராட்டி, 'பைத்தியம்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். உண்மையாகவே எனக்குப் பைத்தியம் பிடிக்கச் செய்துவிடாதீர்கள்!'' என்றாள் நந்தினி.

**பா**ர்த்திபேந்திரன் சிறிது வெட்கம் அடைந்தான். ''பைத்தியம் பிடித்திருப்பது எனக்குத்தான். மன்னியுங்கள். தங்களுடைய விருப்பத்தை முதலில் தெரிவியுங்கள்!'' என்றான்.

''சோழ நாடெங்கும் — தமிழகமெங்கும் — எனக்கு ஏற்பட்டிருக்கும் கெட்ட பெயரைப் போக்கிக் கொள்ள விரும்புகிறேன். அதற்குத்தான் தங்கள் உதவியை நாடுகிறேன். நான் இந்தக் கிழவரை மணந்ததன் காரணமாகச் சோழ குலத்துக்கே கேடு வந்து விட்டதென்று ஜனங்கள் பேசிக் கொள்கிறார்களாம். மதுராந்தகத் தேவரை ராஜ்ய ஆசை கொள்ளச் செய்தது நான்தான் என்று சொல்கிறார்களாம். சோழ நாட்டுச் சிற்றரசர்களை அவர்கள் பக்கம் இருப்பியதும் நான்தான் என்றும் சொல்கிறார்களாம். இந்த அவப் பெயருடன் இறந்து போவதற்கு நான் விரும்பவில்லை....''

''இறந்து போவதைப் பற்றி ஏன் பேசுகிறீர்கள்? என்னைத் துன்புறுத்துவதற்காகவா?''

''பல்லவகுமாரா! தங்களுக்கு ரேகை சாஸ்திரம் தெரியுமா? ரேகை சாஸ்திரத்தில் தங்களுக்கு நம்பிக்கை உண்டா?'' என்று நந்தினி சம்பந்தமில்லாத ஒரு கேள்வியைக் கேட்டாள்.

பார்த்திபேந்திரன் அதற்கு நேர் மறுமொழி சொல்லாமல் ''எங்கே? கையைக் காட்டுங்கள்!'' என்றான்.

நந்தினி வலது கையை நீட்டினாள். அதைப் பார்த்திபேந்திரன் சிறிது நேரம் உற்றுப் பார்த்துவிட்டு, ''ஆச்சரியமான ரேகைகள்! இம்மாதிரி காண்பதே அபூர்வம்! அந்தக் கையையும் சிறிது காட்டுங்கள்!'' என்றான்.

நந்தினி இன்னொரு கையையும் நீட்டினாள். பல்லவன் அதையும் பார்த்துவிட்டு, ''தேவி! இதற்கு முன் யாராவது தங்கள் கரங்களில் அதிசயமான ரேகைகளைப் பார்த்து விட்டு ஏதாவது சொல்லி யிருக்கிறார்களா?'' என்று கேட்டான்.

''ஆம்; பழையாறை இளையபிராட்டி ஒரு தடவை என் கையைப் பார்த்து விட்டுச் சொன்னாள்...''

''என்ன சொன்னாள்?''

''நான் அற்பாயுளில் சாவேன் என்று சொன்னாள்.''

''அது உண்மைதான்'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஐயோ! நீங்களுமா அப்படிச் சொல்கிறீர்கள்?''

''ஆனால் அவள் அரை குறையாக சாஸ்திரம் படித்தவள் என்று தெரிகிறது. இந்தக் கைரேகையில் ஒன்று அற்பாயுளைக் குறிப்பது உண்மைதான். ஆனால் மற்றொரு ரேகை அந்தக் கண்டத்தைக் கடந்து புனர்ஜன்மம் ஏற்படும் என்றும் கூறுகிறது. அந்தப் புனர்ஜன்மத்துக்குப் பிறகு கடல் கடந்த பல நாடுகளுக்குப் பிரயாணம் செய்யும் பாக்கியம் உண்டு என்றும், மன்னாதி மன்னர்களுக்குக் கிட்டாத ஆனந்த வாழ்க்கை வெகு காலம் உண்டு என்றும் கூறுகிறது. இவ்வளவும் தற்செயலாகக் கடற்கரையில் சந்தித்த ஒரு யௌவன புருஷனுடைய உண்மை அன்பினால் கிடைக்கும் என்றும் தெரிகிறது. தங்களுடைய சின்னஞ் சிறு விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக அவன் தன் உயிரையே அர்ப்பணம் செய்வான் என்றும் ரேகைகள் மிகத் தெளிவாகச் சொல்கின்றன...''

### மகிழ்ச்சி ஏன்?

இந்தப் பெண்மணி இவ்வளவு சந்தோஷமாகக் காண்பதற்குக் காரணம் என்ன? ரொம்ப சுலபமாகக் கண்டுபிடிக்கலாம்.

அவர் தம் கையில் வைத்திருப்பது கடிக்கும்; ஆனால் வலிக்காது.

அது ஓடும்; ஆனால் நின்ற இடத்திலேயே நிற்கும்!

அது காரமானது; ஆனால் உறைக்காது!

அடடா, இன்னுமா புரியவில்லை?

34ம் பக்கம் பாருங்கள்



இவ்விதம் கூறிக் கொண்டே பார்த்திபேந்திரன் சட்டென்று நந்தினியின் விரித்த இரு கரங்களையும் பற்றித் தன் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

நந்தினி கைகளை உதறி விடுவித்துக் கொண்டு ''சீச்சீ! இது என்ன காரியம் செய்தீர்?'' என்றாள்.

''மன்னியுங்கள்! இவை தங்கள் கரங்கள் என்பதை மறந்து விட்டேன். இரண்டு செந்தாமரை மலர்கள் என்று எண்ணிக் கொண்டேன்'' என்றான்.

''பழுவேட்டரையர் பார்த்திருந்தால் உம்மை ஈட்டி முனையில் கழுவேற்றியிருப்பார்!''

''தேவி! தங்களுக்காகக் கொடுப்பதற்கு எனக்கு இருப்பது ஓர் உயிர் தானே என்று கவலைப்படுகிறேன்..''

''அந்த ஓர் உயிரையும் இப்படிக் கொடுப்பானேன்? இந்த அநாதைப் பெண்ணுக்கு உதவிசெய்வதற்காகக் காப்பாற்றி வைத்துக் கொண்டிருங்கள்!''

''என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்!''

''சோழ சாம்ராஜ்யம் தாயாதிக் கலகத்தினால் பாழாகி விடாமல் காப்பாற்ற வேண்டும். அதற்குத் தங்களுடைய உதவி வேண்டும்.''

''எப்படி?''

''தங்கள் சிநேகிதர் கரிகாலரைக் கடம்பூர் சம்புவரையர் வீட்டுக்கு அழைத்து வாருங்கள். சம்புவரையருக்கு ஒரு பெண் இருக்கிறாள். அவளை ஆதித்த கரிகாலருக்கு மணம் செய்து வைத்து விட்டால் என் மனோரதம் பூர்த்தியாகும்.''

''இந்த அற்பக் காரியத்துக்குத்தானா இவ்வளவு பீடிகை? ஆதித்த கரிகாலரை அவசியம் கடம்பூருக்குக் கொண்டு வந்து சேர்க்கிறேன். அப்புறம்?...''

''ஆதித்த கரிகாலருக்குச் சம்புவரையர் மகளைக் கலியாணம் செய்துவைத்து விட்டால் கலகம் பாதி தீர்ந்துவிட்டதாகும். சோழ சாம்ராஜ்யத்தில் மதுராந்தகருக்குத் தென் பாதியும் கரிகாலருக்கு வட பாதியும் என்று பிரித்துக் கொடுத்து விட்டால் கலகம் முழுதும் தீர்ந்ததாகும்.''

''பின்னர்?....''

''எனக்கு ஏற்பட்டிருக்கும் கெட்ட பெயர் போய்விடும். பிறகு என் தலைவிதியை நானே நிறைவேற்றிக் கொள்வேன். நடுக் கடலில் விழுந்து உயிரை விடுவேன்....''

''நான் பின்தொடர்ந்து வந்து தங்களைக் காப்பாற்றுவேன். நம் இருவருடைய புனர் ஜென்மம் ஆரம்பமாகும். கடல்களைக் கடந்து தூர தேசங்களுக்குச் செல்வோம். அங்கே தங்களுக்காக ஒரு மாபெரும் ராஜ்யத்தை ஸ்தாபிப்பேன்.''

''ஐயா! இப்படியெல்லாம் பேச வேண்டாம். தென் தமிழ் நாட்டுப்

பத்தினிப் பெண்களின் மரபில் வந்தவள் நான். பழுவேட்டரையரின் தர்ம பத்தினி...''

''தேவி! என்னிடம் உண்மையைச் சொல்லுங்கள். இந்தக் கிழவரை எதற்காக மணந்து கொண்டீர்கள்? இவர் பேரில் காதல் கொண்டா? அல்லது இவருடைய பலாத்காரத்துக்காகவா?''

நந்தினி பெருமூச்சு விட்டாள். அவளுடைய கண் விழிகள் மேல் நோக்கிச் சென்றன. ஏதோ பழைய துயரமான ஞாபகங்களில் சிறிது நேரம் ஆழ்ந்திருந்தாள் என்று தோன்றியது.

''பாவம்! கிழவர் பேரில் பழி சொல்ல வேண்டாம். மனதார இஷ்டப்பட்டுத்தான் இவரை மணந்தேன்.''

''ஏன்? எதற்காக? இவரிடம் அப்படி என்ன கண்டீர்?''

''இவரிடம் ஒன்றும் காணவில்லை.. அரண்மனை வாழ்வுக்கும் அதிகாரத்துக்கும் ஆசைப்பட்டு நானாகவே இவரை மணந்தேன்....''

''என்னால் நம்ப முடியவில்லை.''

''நம்ப முடியாதுதான். ஆனாலும் அது உண்மை. சின்னஞ் சிறு பிராயத்திலிருந்து என்னை ஒருத்தி ஏழை என்றும் அநாதை என்றும் ஏளனம் செய்து வந்தாள். அரச குலத்துப் பிள்ளைகளுடன் விளையாடும் உரிமை கூடக் கிடையாது என்று சொல்லி வந்தாள். அந்த அவமதிப்பைப் பொறுக்க முடியாமல் இந்தத் தவற்றைச் செய்தேன்.''

''தேவி! அப்படித் தங்களை அவமதித்த பெண் பேய் யார்?''

''தெரியவில்லையா? ஊகிக்க முடியவில்லையா?''

''இளைய பிராட்டி குந்தவைதானே?''

''ஆமாம்.''

''அவளுக்கு ஒரு நாள் நான் புத்தி புகட்டியே தீர்வேன்.''

''கடவுளே அவளுக்குத் தண்டனை அளித்து விட்டார். அருமைத் தம்பியும் ஆருயிர்க் காதலனும் ஒரே போக்கில் போய்விட்டார்கள். இப்போது அவளுடைய நிலையை நினைத்தால் எனக்கு அநுதாபமாயிருக்கிறது.''

''இந்தத் தண்டனை அந்த அகம்பாவக்காரிக்குப் போதவே போதாது.''

''சற்று முன் நான் தங்களை வேண்டிக் கொண்ட காரியத்துக்கு உதவி செய்தால் அவளுடைய தண்டனை பூர்த்தியாகும். சோழ சாம்ராஜ்யத்துக்குத் தனி நாயகியாயிருக்க வேண்டும் என்ற அவள் ஆசை மண்ணோடு மண்ணாகும்.''

''தங்கள் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன். பரிசு என்ன தருவீர்கள்?''

''எது கேட்டாலும் தருவேன். தமிழ்ப் பெண் குலத்தின் மரபுக்கு மாறுபடாத எதைக் கேட்டாலும் தருகிறேன்...''

''ராணி! மேலை நாடுகளில் ஒரு புதிய சமயம் தோன்றியிருக்கிறதாம். அரபு தேசம், பாக்தாத் தேசம், பாரஸீகம் முதலிய தேசங்களில் அது பரவியிருக்கிறதாம். அந்தச் சமயக் கோட்பாட்டின்படி கல்யாணமான தம்பதிகள் விரும்பினால் பிரிந்து விடலாமாம். அதற்கு ஒரு சடங்கு உண்டாம். ஸ்திரீகள் கூட வேறு கலியாணம் செய்துகொள்ளலாமாம்.''

''ஆம்; நானும் அவ்வாறு கேள்விப்பட்டிருக்கிறேன்.''

''நாம் அந்த நாடுகளுக்குப் போய் விடுவோம். அந்தச் சமயக் கோட்பாட்டைச் சேர்ந்து விடுவோம்....''

''அப்படியெல்லாம் சில சமயம் நானும் பகற் கனவு காண்பதுண்டு. ஆனால் நடக்கக் கூடிய காரியமா?''

''தேவி! ஏன் நடக்காது? அவசியம் நடக்கும். தாங்கள் மட்டும் சம்மதித்தால் நடக்கும். தங்களுடன் கப்பல் ஏறிக் கடல் கடந்து செல்வேன். தூர தேசங்களில் இறங்குவேன். இந்தக் கையில் பிடித்த கத்தியின் வலிமையினால் பெரியதொரு ராஜ்யத்தை ஸ்தாபிப்பேன். நவரத்தின கசிதமான சிங்காதனத்தில் தங்களை ஏற்றி வைப்பேன். தங்களுடைய சிரசில் பார்த்தோர் கண் கூசும்படியான மணி மகுடத்தைச் சூட்டுவேன். இதற்காகவே நான் பிறந்திருக்கிறேன்; இதற்காகவே இவ்வளவு போர்க் களங்களிலும் சாகாமல் உயிரோடு இருந்து வருகிறேன்...''

''ஐயா! அதோ என் கணவர் திரும்பி வந்து கொண்டிருக்கிறார். படகு கரையை நெருங்கி விட்டது. அமைதி அடையுங்கள். மற்ற விஷயங்களைப் பிறகு பேசிக் கொள்ளலாம்...''

''பிறகு எப்போது தேவி?''

''எங்களுடன் தஞ்சாவூருக்கு வாருங்கள்! விருந்தாளியாக வர அழைப்புக் கிடைக்காவிட்டால் சிறையாளியாகவாவது வாருங்கள்!''

''தங்களுடைய அழைப்பே எனக்குப் போதும்'' என்றான் பார்த்திபேந்திரன்.

பழுவேட்டரையர் ஏறி வந்த படகு கரையை அடைந்தது. கிழவர் படகிலிருந்து இறங்கி ஆங்காரமே உருவெடுத்தவர் போல் வந்தார்.

நந்தினியும் பார்த்திபேந்திரனும் எழுந்து நின்றார்கள். அவர்களைப் பழுவேட்டரையர் பார்த்த பார்வையில் அனல் பொறி கிளம்பிற்று. பாவம்! அத்தனை நேரம் அவர்கள் சேர்ந்து உட்

கார்ந்து பேசிக்கொண்டிருந்ததை நினைத்தாலே கிழவருக்குக் கோபமாயிருந்தது. அதை வெளியிடுவதற்கும் வழியில்லை. ஆகையால் உள்ளத்தில் கோபம் மேலும் கொதித்துப் பொங்கியது.

''நாதா ! கப்பலை நன்கு சோதித்தீர்களா? மாலுமிகளை நன்ருய் விசாரித்தீர்களா ? இவர் கூறியதெல்லாம் உண்மைதாளு?'' என்று நந்தினி கொஞ்சும் குதலை மொழியில் கேட்டாள்.

அந்தக் குரல் பழுவூர் அரசரைக் கொஞ்சம் சாந்தப்படுத்தியது.

''ஆம், ராணி ! இவன் கூறியதெல்லாம் உண்மையென்று தெரிந்தது. சோழ நாட்டின் தவப் புதல்வன், சோழ குலத்தின் செல்வக் குமாரன்,— தமிழகத்தின் கண்ணின் மணியான இளவரசன், — போய் விட்டான்'' என்று கூறிப் பல்லவனைத் திரும்பிப் பார்த்து, ''அதற்குக் காரணமானவன் இதோ நிற்கும் கொலை பாதகச் சண்டாளன்தான் !'' என்று கர்ஜித்தார்.

''ஐயா ! அதற்குக் காரணம் நான் அல்ல; என் பேரில் பழி போடாதீர்கள்! இளவரசரைக் கடல் கொண்டதற்குக் காரணம் சோழ நாட்டையே ஆட்டுவிக்கும் பெண் உருக் கொண்ட மோகினிப் பிசாசு !'' என்ருன் பார்த்திபேந்திரன்.

கிழவரின் கோபம் இப்போது அணை கடந்த வெள்ளமாயிற்று. நந்தினியைப் பற்றித்தான் அவன் அவ்வாறு சொன்னதாக எண்ணினுர்.

''அட பாவி! என்ன சொன்னுய்?'' என்று கூறிக் கொண்டு, தரையில் கிடந்த ஈட்டியைச் சட்டென்று குனிந்து எடுத்தார். பார்த்திபேந்திரனைக் குறி வைத்து ஓங்கினுர்.

நந்தினி அவருடைய கையைப் பிடித்துத் தடுத்தாள். ''நாதா! இது என்ன காரியம் ! எத்தனையோ பகைவர்களைக் கொன்ற தங்கள் வெற்றி வேல் இந்த விருந்தாளியின் இரத்தத்தினுல் கறைப் படலாமா?'' என்ருள்.

''ராணி! இவளு விருந்தாளி? சற்று முன்னுல் உன்னைப் பற்றி இவன் கூறியதை நீ கேட்கவில்லையா ?'' என்ருர் கிழவர். கோபத்தினுல் அவர் குரல் குழறிச் சொற்கள் தடுமாறின.

''அவர் என்னைப் பற்றியா சொன்னுர்? நன்ருய்க் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். அப்படியானுல் என் கையிலுள்ள கத்தியினுலேயே பழி வாங்குவேன். தங்களுக்குச் சிரமம் தர மாட்டேன்!'' என்ருள் நந்தினி.

''ஐயா, நான் என்ன பைத்தியமா, பழுவூர் இளைய ராணியைப் பற்றி அவ்விதம் சொல்வதற்கு? பழையாறையில்












உள்ள மோகினிப் பிசாசைப் பற்றி யல்லவா சொன்னேன்? இளையபிராட்டி குந்தவை வந்தியத்தேவன் என்னும் வாலிபனிடம் இரகசிய ஓலை கொடுத்து இளவரசருக்கு அனுப்பினாள். அந்த முரட்டு வாலிபனைக் காப்பாற்றுவதற் காகவல்லவோ நான் எவ்வளவு தடுத்தும் கேளாமல் இளவரசர் அலைகடலில் குதித்தார்? ஆகையால் இளவரசரின் மரணத்துக்குக் குந்தவை காரணம் என்று சொன்னேன்'' என்றான் பார்த்திபேந்திரன்.

பழுவேட்டரையர் தம் அவசர புத்தியைக் குறித்துச் சிறிது வெட்கம் அடைந்தார். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''வெறுமனே மூடி மறைக்கப் பார்க்காதே! இளவரசரின் அகால மரணத்துக்கு நீயும் பொறுப்பாளிதான். அத்தகைய சுழற்காற்று அடித்த சமயத்தில் அவர் கப்பலிலிருந்து படகில் இறங்குவதற்கு நீ எப்படிச் சம்மதித்தாய்!—தொலைந்து போ! என் கண் முன்னால் நில்லாதே!'' என்றார்.

நந்தினி குறுக்கிட்டு, ''நாதா! இவரையும் தஞ்சாவூர் அழைத்துப் போவது நல்லதல்லவா? நடந்தது நடந்தபடி இவரே சக்கரவர்த்தியிடம் தெரிவிப்பது நலம் அல்லவா? இல்லாவிட்டால், ஏற்கனவே நம் பேரில் குற்றம் சொல்லக் காத்திருப்பவர்கள் இதையும் சேர்த்துச் சொல்வார்களே? நாம்தான் இளவரசரைக் கடலில் மூழ்கடித்து விட்டோம் என்றுகூடக் கூசாமல் பழி சொல்வார்களே?'' என்றாள்.

''சொன்னால் சொல்லட்டும்! அதற்கெல்லாம் நான் அஞ்சியவன் அல்ல. சொல்லுகிறவன் நாக்கைத் துண்டிக்கச் செய்வேன். ஆனால் இவன் நம்மோடு வருவதும் ஒரு காரியத்துக்கு நல்லதுதான். — பார்த்திபேந்திரா! ஏன் அங்குமிங்கும் பார்த்து விழிக்கிறாய்? தப்பி ஓடலாம் என்று பார்க்கிறாயா?'' என்று கூறிச் சற்றுத் தூரத்தில் நின்ற வீரர்களைக் கைகாட்டி அழைத்தார். நாலு பேர் விரைந்து வந்தார்கள்.

''இவனைப் பிடித்துக் கட்டுங்கள்!'' என்று கட்டளையிட்டார்.

வீரர்கள் நாலு பேரும் பார்த்திபேந்திரனை நெருங்கினார்கள். அருகில் நெருங்கி வரும் வரையில் அவன் சும்மாயிருந்தான். பிறகு ஒரு நொடிப் பொழுதில் தன் கை வரிசையைக் காண்பித்தான். நாலு வீரர்களும் நாலு பக்கம் போய் விழுந்தார்கள்.

''ஐயா! என்னைக் கட்டித் தலையிடுவதாயிருந்தால் மற்றவர்களை அனுப்ப வேண்டாம். வீராதி வீரரும் முப்பத்தாறு போர்க்களங்களில் அறுபத்துநாலு காயங்களை அடைந்தவருமான பெரிய பழுவேட்டரையர் கையினால் கட்டுப் படுவதற்கு நான் சித்தமாயிருக்கிறேன். மற்றவர்களை நான் அருகிலும் நெருங்க விடமாட்டேன்!'' என்றான்.

பழுவேட்டரையர் முகத்தில் சிறிது மலர்ச்சி காணப்பட்டது; ''நீ வீர பல்லவ குலத்தில் பிறந்த வீரன்; சந்தேகமில்லை. எங்களுடன் தஞ்சாவூருக்கு வந்துவிட்டுப் போகச் சம்மதம் என்றால் சொல். உன்னைக் கட்ட வேண்டிய அவசியமில்லை'' என்றார்.

''அதுதான் என் விருப்பம்; சக்கரவர்த்தியை நேரில் பார்த்து நடந்தது நடந்தபடி சொல்ல விரும்புகிறேன். என் பேரிலும் வீண் பழி ஏற்படக் கூடாதல்லவா?'' என்றான் பார்த்திபேந்திரன்.

''அப்படியானால் உடனே புறப்படுவோம்'' என்றார் பழுவேட்டரையர்.

அச்சமயம் அவர்கள் இருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்திலிருந்த காட்டிலிருந்து ஆந்தை ஒன்று கூவும் சத்தம் கேட்டது.

நந்தினி சத்தம் வந்த திக்கை நோக்கினாள். அதனால் அவள் முகத்தில் ஏற்பட்ட மாறுதலை மற்ற இருவரும் கவனிக்கவில்லை.

''இந்தக் கோடிக்கரைக் காடு மிக விசித்திரமானது. இங்கே பட்டப் பகலிலேயே கோட்டான் கூவுகிறதே!'' என்றான் பார்த்திபேந்திரன்.

இன்னும் இரண்டு தடவை அதே மாதிரி ஆந்தையின் குரல் கேட்டது.

நந்தினி இரும்பிப் பார்த்து, ''உடனே புறப்பட வேண்டியதுதானா? இன்னும் ஒரு நாள் இங்கே இருந்து பார்ப்பது நல்லதல்லவா? இளவரசர் ஏதாவது கட்டையைப் பிடித்துக்கொண்டு கரையில் வந்து ஒதுங்கக் கூடும் அல்லவா?'' என்றாள்.

''பார்த்திபேந்திரா! இளைய ராணியின் மதி நுட்பத்தைப் பார்த்தாயா? நமக்கு இது தோன்றாமல் போயிற்றே? ஆம்; இன்னும் ஒரு நாள் இங்கே இருக்க வேண்டியதுதான். இருப்பது மட்டும் போதாது. கடற்கரை நெடுகிலும் ஆட்களை நிறுத்தி வைக்க வேண்டும்; தேடிப் பார்க்கவும் சொல்ல வேண்டும்!'' என்றார் பழுவேட்டரையர்.

''எனக்கு ஆட்சேபமில்லை, ஐயா! ஆனால் இளவரசர் இனி அகப்படுவார் என்ற நம்பிக்கை எனக்கில்லை. சுழற்காற்று அடித்தபோது கடலின் கொந்தளிப்பைப் பார்த்திருந்தால் தாங்களும் என்னைப் போலவே நிராசை கொள்வீர்கள்'' என்றான் பார்த்திபேந்திரன்.

எனினும், கிழவர் கேட்கவில்லை. கடற்கரை நெடுகிலும் ஒருகாத தூரத்துக்குத் தம் ஆட்களைப் பரவலாக நிறுத்தி வைத்தார். அவரும் அமைதியின்றிக் கடற்கரையோரமாக அலைந்து திரிந்தார்.

(தொடரும்)

CTC* டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும்
அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள் மிகச்சிறந்த டஸ்ட் டீ

ப்ரூக் பாண்ட்
நிபுணர்களால் பக்குவம்
செய்யப்பட்டிருப்பதே
அது சிறந்து
விளங்கக்காரணம்




*கட், டியர், க்ரஷ் — இந்த தனிப்பட்ட டீ தயாரிக்கும் முறையானது விரைவில் கரையவும், மிகுந்த தேயிலைச்சத்துக்கிடைக்கவும் உறுதியளிக்கிறது.

BB 5386

# ரகுபதி ராகவ மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 5. "உளன் கண்டாய்!"

பிரபஞ்சத்தில் ஸர்வ வியாபகமான சக்தி ஒன்று இருந்து வருகிறது. அதன் தன்மையை முற்றிலும் அறிந்தவர் இல்லை. எங்கும் பரந்து நிற்பினும் நான் அதைக் கண்ணால் காணவில்லை. ஆயினும் அது எனக்குப் புலப்படுகிறது என்பதில் ஐயமில்லை. கண்களால் காணப்படாத பரம்பொருள் தன் சக்தியால் தன்னைப் புலப்படுத்திக் கொள்கிறது. எனினும், அதை யாரும் விவரித்து நிரூபிக்க இயலாது. நாம் காணும் எந்தப் பொருள் போன்றதும் அல்ல அந்தப் பொருள். அது நம்முடையபஞ்சேந்திரியங்களுக்குஅடங்காது.

இவ்வாறானது பரம்பொருள். ஆயினும் நம்முடைய புத்தியை உபயோகித்து, ஈச்வரன் ஒருவன் இருக்கிறான் என்பதை ஓரளவு ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம்.

சாதாரணமாக, தேசத்தில் உழைத்து வரும் சம்சாரிகளுக்கு, தேசத்தை யார் ஆண்டு வருகிறார்கள், ஏன் ஆண்டு வருகிறார்கள், எப்படி ஆண்டு வருகிறார்கள் யாதுமே தெரியாது. ஆயினும் ஏதோ ஓர் ஆதிபத்தியம் நடந்து வருகிறது என்பதை மாத்திரம் அனைவரும் உணர்வார்கள். சென்ற ஆண்டு நான் மைசூர் ராஜ்யத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தேன் அல்லவா? அப்போது அநேக ஏழைக் கிராமவாசிகளைக் கண்டு பேசினேன். மைசூர் தேசத்தை யார் ஆள்கிறார்கள் என்று அவர்களைக் கேட்டேன். "ஒரு தெய்வம் ஆள்கிறது" என்றார்கள். தங்களுடைய அரசனைப் பற்றி அவர்களுக்குத் தெரியவில்லை. அந்தக் கிராமவாசிகளுக்கே தங்கள் எஜமானரைப் பற்றி இவ்வளவுதான் தெரிந்தது என்றால், கடவுளுக்கும் எனக்கும் எவ்வளவு தூரம்! இந்தக் கிராமவாசிகளுக்கும் அவர்களை ஆளுகிற மகாராஜாவுக்கும் இடையே அவ்வளவு தொலை இல்லை. எனக்கு எவ்வாறு தெரியப் போகிறது, அரசர்களுக்கு அரசனை பகவானைப் பற்றி? அவன் ஒருவன் இருக்கிறான் என்பதே எனக்குத் தெரியாமல் இருப்பதில் என்ன வியப்பு? ஆயினும் மைசூரில் நான் கண்ட ஏழை கிராமவாசிகள் தெரிந்து கொண்டிருக்கிற முறையில் நானும் பிரபஞ்சத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்கிறேன். இந்த உலகம் ஓர் ஆட்சியின் கீழ் அமைதி பெற்று வருகிறது. அனைத்தும் ஒரு நியமப்படி நடந்து வருகிறது. அந்த நியதியை யாரும் மாற்ற முடியாது. யாவரும், எதுவும், உயிர் கொண்டதும் உயிர் அற்றதுமான எல்லாம் அதற்கு உட்பட்டவை என்பதை நான் காண்கிறேன்.

அந்த நியதியும் ஒரு குருட்டு நியதியல்ல. உயிரற்ற கண்ணற்ற ஆதிக்கம் அல்ல. உயிர் கொண்ட ஜீவன்களை உயிரற்ற ஓர் ஆட்சி எப்படி அடக்கி ஆள முடியும்? தாவரங்களுக்கும் மற்ற ஜடப்பொருள்களுக்கும்கூட உயிர் உண்டு, அபார சக்தியும் உண்டு என்பதைக் கண்டிருக்கிறோம் அல்லவா? நியதி வேறு, நியதியை அமைத்திருப்பவன் வேறல்ல. அனைத்தையும் ஆளும் ஒரு நியதி உண்டே அதுவே கடவுள் என்று உணர்வோமாக.

ஆட்சியும் அரசனும் ஒன்றே. ஆட்சியில்லை என்று சாதிக்க முடியாது. உலகத்துக்கு ஓர் அரசன் இல்லை என்றும் சாதிக்க முடியாது. உலக நியதியைப் பற்றியும், உலக அரசனைப் பற்றியும் எனக்குத் தெரிந்திருப்பது மிகக் கொஞ்சமே. அப்படியிருக்க, அவன் இல்லை என்று சொல்வதில் என்ன அர்த்தம்? அரசன் இல்லையென்று நான் சொன்னால் அரசன் இல்லாமல் போவானா? ஆட்சி புரியும் அரசாங்கத்தை நான் இல்லை என்று சொன்னாலும் அது இருந்தேதான் இருக்கிறது. அதற்கு உட்பட்டேதான் வாழ்க்கை நடத்துகிறேன். அதைப் போலவே ஈசன் இல்லை அவனுடைய ஆட்சியும் இல்லை என்று நான் பேசினாலும், அந்த நியதியிலிருந்து நான் விடுபட முடியாது. ராஜ்யத்தில் நடைபெறும் ஆட்சியை வெளிப்படையாக ஒப்புக் கொண்டேனானால் அதற்குக் கீழ்ப்பட்டு வாழ்க்கை நடத்துவது சுகமாகிறது. அவ்வாறே தெய்வத்தின் ஆதிபத்தியத்தை ஒப்புக் கொண்டு அதற்கு அடங்கியும் ஒடுங்கியும் நடந்து கொண்டேனானால், உயிர் வாழ்க்கையில் கஷ்டம் ஓரளவு குறைகிறது.

ஏதோ ஒரு மாதிரியாகத் தெரிந்ததும் தெரியாததுமாகக் காண்கிறேன். இந்த உலகத்தில் அனைத்தும் நிலையற்றவை. இன்றிருந்த வடிவம் நாளை இல்லை. எல்லாம் மாண்டும் மறைந்தும் போகின்றன. ஆயினும் அசையாததும் மாறுதல் இல்லாததுமான சக்தி ஒன்று இருந்தே வருகிறது. அதுவே அனைத்தையும் சேர்த்தும் பிரித்தும் விடுகிறது. இதை நான் காண்கிறேன். ஓடும் ஜலம் கடலில் போய் விழுகிற ஒரு நதியின் நிலையாக இருந்து வருகிறது. அதுபோலவே மாறியும் அழிந்தும் உண்டாகியும் வரும் பொருள்கள் அனைத்தும் ஒரு நிலையான பிரபஞ்சமாகத் தோன்றி வருகிறது. சிருஷ்டியும் சம்மாரமும், புனர் உத்பவமும் செய்து வருகிற பராசக்தி ஒன்று இருக்கிறது என்பதைக் காண்கிறேன். எங்கும் பரந்து நின்று ஆளும் அந்தச் சக்தியே கடவுள். இந்தப் புலன்களால் நான் காணும் பொருள்களிலிருந்தும் புலனுக்குப் புலனாகாத அந்தச் சக்தியே நிலையானது. ஆண்டவன் ஒருவனே மெய்ப்பொருள்.

# கண்ணில் தெரிகின்ற கானம்!

ரா. கணபதி



யமன் கவலையுடன் சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறான்.

சூலமும் பாசமும் ஏந்தி நிற்கும் தன் தூதர்களை நோக்கி, "உங்களுடைய ஆர்ப்பாட்டங்கள் அடங்கும் காலம் வந்துவிட்டது" என்று மொழிந்துவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறான்.

'நல்லவர்கள் நல்லவர்களாக இருந்து தொலையட்டும்; அவர்கள் யமலோகத்துக்கு வராமல் சொர்க்கத்துக்குப் போனால் போகட்டும்; ஆனால் நல்வழி தெரியாமல் திரிகிறவர்கள் பூமியில் உள்ளனரே! அவர்களாவது யமலோகத்துக்கு வந்தால் போதும் என்று நினைத்தேன். ஆனால் அவர்களும் தியாகராஜ கிருதிகளைப் பாட ஆரம்பித்துவிட்டனரே!' என்று யமன் சிந்தாகுலமாக அமர்ந்து விட்டான்.

தியாகராஜ கீர்த்தனங்களை இப்படிப் புகழ்ந்திருப்பது யார் தெரியுமா? சாட்சாத் தியாகராஜர்தான். யமனுக்குக் கூடக் கருணை காட்டி, அவனது வருத்தத்தில் தாமும் தோய்ந்து துயர ராகமான முகாரி ராகத்தில் 'சிந்திஸ்துந்நாடே யமுடு' என்று பாடுகிறார் சங்கீத சத்குரு.

ரொம்பவும் தற்பெருமைக்காரராகத்தான் தோன்றுகிறார். ஆனால் உண்மையில் இது தன்னைப் பற்றிய பெருமை இல்லை. நாதத்தின் பெருமை, - நாமத்தின் பெருமை இரண்டும் சேர்ந்ததாலேயே தமது பாடல்களுக்கு மக்களை நல்வழிப்படுத்தி, யமனுலகு செல்லாத சிறப்பை அளிக்கும் சக்தி உண்டாயிருப்பதாகக் கருதுகிறார் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள்.

நன்னெறிகளும், நல்லொழுக்கமும் இன்றி நாத உபாசனை கிடையாது என்பது தியாகராஜர் கண்ட அநுபவ உண்மை.

நாதோபாஸனையைப் பற்றி அவர் 'ஸங்கீத சாஸ்திர ஞானமு' என்ற பாடலில் கூறுகையில், அது 'அன்பு, பக்தி, நன்மக்களின் வாத்சல்யம், பகவானின் கடாட்சம், ஒழுக்க வாழ்வு, நிஷ்டை, கீர்த்தி, செல்வம் முதலியவற்றைத் தரும்' என்கிறார்.

இதே போல் 'ஸுகி எவரோ'வில் நாம இன்பத்தை அறிந்தவனின் இலக்கணங்களைக் கூறுகையில், அவன் சத்தியத்திலிருந்து பிறழமாட்டான்; உலகமனைத்துக்கும் தொண்டனாக இருப்பான்; தெய்வங்களிடையே உயர்வு — தாழ்வு கருதமாட்டான்; ஸுஸ்வர கானமுடன் ராம நாம ரஸத்தை அநுபவிப்பான் என்கிறார்.

எனவே, நாதம், நாமம், நன்னெறி இவை ஒன்றிலிருந்து மற்றது பிரிக்கவொண்ணாதபடி ஒன்றியிருப்பதாகவே கண்டிருக்கிறார் தியாகையர். அவரது பார்வையில் கலைஞன்—பக்தன் — நல்லவன் — உலகத் தொண்டன் இவர்களைப் பிரித்துச் சொல்ல முடியாது.

ராமனின் உத்தம குணங்களைப் பாடிய தியாகையர் அப்படிப் பாட வேண்டியவனுக்கு இருக்க வேண்டிய உத்தம குணங்களையும் பல இடங்களில் குறிப்பிடுகிறார். 'பக்துனி சாரித்ரமு வினவே' (பக்தனின் நடத்தையைக் கேட்பாயாக), 'கருண ஏலாகண்டே நீவிதமே' (கருணைக்குப் பாத்திரமாக வேண்டுமெனில் அது இவ்விதமே) என்ற இரு கிருதிகளில் ஸ்ரீ தியாகையர், நரஸிமேதாவின் 'வைஷ்ணவ ஜனதோ' பாடலை அதிசயிக்கத்தக்க விதத்தில் நினைவூட்டுகிறார்.

முதலில் 'பக்துனி சாரித்ர'த்தைப் பார்ப்போம். பக்தன் இப்படியெல்லாம் இருக்கக் கூடாது என்று அவர் அடுக்கிக் கொண்டே போவதிலிருந்து மெய்யடியாரின் இயல்புகளைக் காண்கிறோம்.

சீதாராமனின் பக்தன் பற்றற்றவன்; உடலில் வாழும்போதே வீடு எய்த ஜீவன்முக்தன் அவன்; தன் அநுஷ்டானங்களில் செருக்கடையாதவன்; கபடப் பேச்சற்றவன்; ஊர் ஊராகச் சுயவிளம்பரம் செய்து திரியாதவன்; மனைவி மக்கள்மீது மோகம் கொள்ளாதவன்; இல்லற இன்பமே சதமென எண்ணாதவன்; சிவபெருமானுக்கும் திருமாலுக்குமிடையே பேதம் பாராட்டாதவன்; வயிறு நிரப்புவதற்காகப் பொய்க்கு ஆட்படாதவன்; அநுமன் அணையும் ராமனின் அடியிணையை மறவாதவன்; ராஜஸ தாமஸ குணங்களை நீக்கிய சத்துவன்; சுயலாபங்களை எண்ணாதவன்; யோகியாக வாழ்ந்து பகவானின் சித்தத்தைத் தன்பால் திருப்புவதில் சளைக்காதவன்.

இதுவே தியாகையர் காட்டும் பக்திமான்.

இங்கே தொடக்கத்திலேயே பக்தனை, ஜீவன் முக்தனாகச் சொல்கிறார். நாதமும் நாமமும் ஒன்றியிருப்பது போலவே பக்தியும் ஞானமும் ஒன்றியிருப்பதாக அவர் கண்டதால்தான் இப்படிச் சொல்கிறார்.

இங்கு பக்த லக்ஷணத்தைக் கூறியது போலவே, 'கருண ஏலாகண்டே'யில் ஞானியின் இயல்புகளைப் பாடுகிறார். முதலிலேயே ஞானியும் பக்தனும் வேறானவர் அல்ல, ஒருவரே என்று சுட்டுகிறார். பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றே என்ற அத்வைத ஞான மார்க்கத்தில் செல்ல விரும்புபவனுக்கும் பகவானின் கருணை அவசியம்; அந்தக் கருணைக்குப் பாத்திரமாக வேண்டியவன் இவ்வாறெல்லாம் ஒழுக வேண்டும் என்கிறார்.

அவன் பொய் பேசான்; அற்பர்களிடம் இச்சகம் பாட மாட்டான்; அரசாங்க உத்தியோகத்தில் ஆசை வைக்க மாட்டான்; சூரிய உபாசனையை மறவான்; புலால் உண்ணான்; மது அருந்தான்; யாரையும் இம்சை செய்யான்; வித்தையை மறவான்; மனைவி - மக்கள் - மண் இவைகளிடம் பாசம் வைக்க மாட்டான்; தன் ஞானத்தில் இறுமாப்

புடன் திரியான்; வஞ்சனை அறியான்; பெரியோரிடம் முறை தவறான்; கவலைக்கு இடம் தந்து சுகத்தைக் கெடுத்துக் கொள்ள மாட்டான்; நான் என்ற பற்றின்றி, சாட்சிமாத்திரமாக ஒதுங்கி இருப்பதே ஆன்மா என்ற லட்சியத்தைக் கைவிடான்.

இதில் புலால் உண்ணாமை, மதுவிலக்கு, அஹிம்சை இவை அடுத்தடுத்துப் பாடப் பெறுவதைக் கவனிக்கும்போது, காந்தி மகாத்மா இந்தப் பாட்டைக் கேட்டிருந்தால் இதற்கும் 'வைஷ்ணவ ஜனதோ'வின் அந்தஸ்தைத் தந்திருப்பார் எனத் தோன்றுகிறதல்லவா?

**'வை**ஷ்ணவ ஜனதோ'வில் நரஸி மேதா உண்மையான வைணவனின் குண விசேஷங்களைக் கூறி முடிக்கும்போது, ''இப்படிப்பட்டவனைத் தரிசிப்பவனின் பல தலைமுறைகளும் கடைத்தேறி விடுவர்'' என்கிறார். மெய்யடியாராக வாழ்ந்த தியாகராஜரைத் தரிசித்தால் அப்படிப்பட்ட பாக்கியம் கிடைக்கும் என்று கருதி ஓவியர் கனு தேசாய் இங்கு நமது சங்கீத சத்குருவின் சித்திரத்தைத் தந்திருக்கிறார்.

'தியாகராஜரை எப்படித் தரிசிப்பது? அவர்தான் மறைந்து விட்டாரே!' என்று கேட்கலாம்.

ஆனால் இன்றும் தியாகராஜர் தரிசனம் தந்தே வருகிறார் — தமது கிருதிகளின் மூலம்.

மற்ற வைணவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை இந்தக் கட்டுரைத் தொடரில் கண்டோம். ஆனால் தியாகராஜரை மட்டும் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளில் அன்றி, அவரது கிருதிகளில் காணவே மனம் விழைகிறது. தியாகையரின் சரித்திரம் கதா காலட்சேபங்களில் விமரிசையாக வழங்குகிறது. ஆனால் அதைவிட அவரது கிருதிகளே அவரது



வாழ்வாக — வாழ்வின் உட்பொருளாக—தோன்றுகின்றன. கபீர்தாஸர், மீரா, துளஸிதாஸர் இவர்களுக்கும் இது பொருந்தும். ஆனால் இவர்களது உலக வாழ்வும் இவர்கள் இயற்றிய பாடல்களும் பின்னிப் பிணைந்த அளவுக்குக்கூடத் தியாகையர் விஷயத்தில் காணவில்லை. அண்ணனின் கொடுமைக்கு அவர் ஆளானது - அண்ணன் ஆற்றில் எறிந்த ராம விக்ரகத்தை அவர் கண்டெடுத்தது - சரபோஜி மன்னனுக்குப் பாட மறுத்தது — திருப்பதி யாத்திரையில் மரித்தவனை உயிர்ப்பித்தது — கோவூரில் ராம லட்சுமணரே அவருக்காகக் கள்வரைத் தாக்கியது, என்று இப்படி உணர்ச்சி மயமான பல சம்பவங்களைப் பிரவசனகர்த்தர்கள் வருணிக்கிறார்கள். ஆயினும் இவற்றுக்கெல்லாம் மேலான உணர்ச்சியின் எழுச்சியைத் தியாகையரது பாடல்களிலேயே காண முடிகிறது. தியாகையர் என்பவர் சம்பவங்களில் இல்லை; சங்கீதத்திலேயே இருக்கிறார் என்று தோன்றுகிறது.

சம்பவங்களுக்கு முடிவுண்டு. சங்கீதமோ முடிவற்றது. இதனால்தான் சங்கீதமயமாகி **விட்ட தியாகையரை இன்றும் அவரது பாடல்களில் தரிசனம் செய்ய முடிகிறது. இனி என்றும் அவரைத் தரிசனம் செய்யவும் முடியும். எனவே, 'தேனும் தர்சன கர்த்தா' என்ற நரனி வாக்குக்குத் தியாகையரை ரூபகமாக்குவது விசேஷப் பொருத்தமே!**

சங்கீதத்துக்கும் தரிசனத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதை நம் நாட்டின் பக்த ஞானிகள் கண்டு இயம்பி உள்ளனர். தியாகைய சுவாமிகளே பல பாடல்களில் இதை வெளியிடுகிறார்.

ஒலியில் பிறந்தது சங்கீதம்; ஒளியில் பிறப்பது உருவ தரிசனம். ஆனால் ஒளியே ஒலியில் பிறந்ததுதான். சம்ஸ்கிருதத்தில் 'வர்ணம்' என்ற பதம் 'எழுத்து', 'நிறம்' இரண்டையும் குறிப்பதிலிருந்தே ஒலிக்கும் ஒளிக்கும் உள்ள ஒற்றுமை புலனாகிறது.

முதலில் நாதம் இருந்தது; அதிலிருந்தே ரூபம் பிறந்தது என நமது மறைகள் மொழிகின்றன. **'In the beginning was the Word'** என்று பைபிள் கூறுவது இதைத்தான்.

நாதத்தில் பிறந்ததே நாமம்; நாதத்தில் பிறந்ததே கீதம். எனவே நாம சங்கீர்த்தனமும் உருவத்தைக் காட்டிக் கொடுக்கிறது. 'காட்டிக் கொடுப்பது' மட்டுமல்ல. மிக உயர்ந்த பக்குவ நிலையில் நாமமே ரூபமாகத் தெரியும்; கீதமே ரூபமாகத் தெரியும்; ஒலியே ஒளியாகத் தெரியும்.

நாமசித்தாந்திகள் விசேஷமாகப் போற்றும் இந்த அம்சத்தையே கம்பரும் சொல்கிறார்: 'ராம என்னும் செம்மை சேர் **நாமம் தன்னைக் கண்களில் தெரியக் கண்டான்'**

சங்கீதம் தருகிற தரிசனம் பற்றி — கண்ணுக்குத் தெரிகின்ற கானம் பற்றி — தியாகையர் நுண்ணிய கவியுணர்வுடன் குறிப்பிடுகிறார். 'சப்த ஸ்வர சுந்தரிகளை பஜிப்பாய்' என்று 'சோபில்லு'வில் கூறும்போது அவர் ஒலிகளை அழகியராகக் கண்டது தெளிவாகிறது.

'ரஞ்சகமான ராகங்கள் சுந்தரமான ரூபங்களைத் தரித்து, 'கல்' கல்' என்று சிலம்பொலிக்க நடனமாடும் மகிமையை அறிந்தவன் இத்தியாகராஜன்' என்று இன்னொரிடத்தில் கூறுகிறார் ('ஸ்ரீபப்ரிய').

ஸ்வரங்களின் தனி உருவம் இருக்கட்டும்; ஸ்வரங்களின் பிறப்பிடமான நாதத்தின் உருவமே மும்மூர்த்தியரும், அவற்றுக்கு மேம்பட்ட ஸ்ரீ ராமசந்திரனும் என்கிறார் சத்குரு.

'நாதோபாஸனா' என்ற கிருதியில், சங்கரனும், நாரணனும், பிரமனும் ஒளி பெற்றது அவர்கள் நாதத்தை உபாசித்ததாலேயே என்கிறார். ஒலியே ஒளி தருகிறது.

நாதம் என்ற அமுத ரசம் நரவடிவெடுத்து ராமனாயிற்று ; அப்போது சப்த ஸ்வரங்களும் அவனது வில்லில் பூட்டிய மணிகளாகிக் கிணுகிணுத்தன ; அந்த வில் எது தெரியுமா ? ராகமே! கனம், நயம், தேசியம் என்பவை நாண்களாயின. தாளகதிகள் அம்பு வீச்சாயின. ராமன் பேசும் மொழி சங்கீத சங்கதிகளே — இப்படிக் கூறுகிறார் 'நாத ஸுதாரஸ'வில்.

தியாகையர் ஸ்வரங்களை ஆராய்ந்தும் அநுபவித்தும் மகிழ்ந்தவர். அதுமட்டும் அல்ல. அவர் நாம ஜபத்தில் ஈடுபட்டு ஒலியும் அட்சரங்களும் பிறக்கும் அடி ஆழத்துக்குள் முழுகி நாதப் பிரம்மத்தை அநுபவித்தவர். அப்போது ஒலியிலிருந்து உருவம் பிறப்பதைப் பிரத்தியட்சமாகக் கண்டவர். ''என் ஜபத்தின் அட்சரங்கள் உருவெடுத்து வந்தவன் அல்லவா நீ?'' (நாஜப வர்ண ரூபமா) என்று ஆனந்தக் களிப்பில் இசைத்தவர் அல்லவா அவர் ?

பாட்டில் இருக்கும் **சொற்களின் அர்த்தத்தால்** இறைவனைப் பெறுவது மட்டுமின்றி, **சொற்களிலேயே** — இசையிலேயே இறைவனைப் பெற்றவர் அவர்.

உண்மையான நாதோபாஸகன் ஆண்டவனை நாதமாகப் பார்ப்பது மட்டுமின்றி, தானும் அவனுகவே உருவம் கொள்கிறான். இறைவனின் உருவையே பெறும் சாதனைக்கு சாரூப்யம் என்று பெயர். நாதோபாஸகன் தன் இஷ்ட தெய்வத்தின் வடிவத்தைத் தானே பெறுகிறான் என்பதைத் தெள்ளத் தெளியக் கானம் செய்கிறார் ஸ்ரீ தியாகையர் :

**சங்கீத சாஸ்த்ர ஞானமு**
**ஸாரூப்ய ஸௌக்யதமே மனஸா**

இங்கே நாதத்துக்கும் ரூபத்துக்கும் உள்ள தொடர்பு — 'தொடர்பு' என்றால் போதாது; 'அபேதம்' என்றே சொல்லி விடலாம்—நன்கு வெளியாகிறது.

சத்குரு தியாகையர் இந்த உன்னதமான சாரூப்ய நிலையை அடைந்தவர் என்பதில் இம்மியும் ஐயம் உண்டா ?

சாரூப்யத்தின் பயன் அந்த உருவைத் தரிசித்து மகிழ்வதே. எனவே, கானம் செய்த மகானையே நிரந்தரமாகக் காட்சி தரும் வைஷ்ணவராக இங்கு தரிசனம் செய்வது மிக மிகப் பொருத்தமாகக் காண்கிறது.

CTP-32 TAM

# இனாம்

## உங்களுக்குப் பிடித்தமான
## பினாகா டாப் டூத் பேஸ்ட்

நீங்கள் விரும்பும்

## பினாகா டால்க்குடன்

இனாம்




"அந்த மெல்லிய, துல்லிய மணங்கமழ், மங்கல பினாகா டால்க்;
மேனியை தழுவிடத் தூண்டும். இதனுடன் நழுவிட முடியா
நல்ல வாய்ப்பாக இப்போது உங்களுக்கு பிடித்தமான பினாகா டாப்
டூத்பேஸ்ட் இனாமாக கிடைக்கிறது. திரளென மொய்க்குது கூட்டம்.
தேடிப் பெறுக இன்றே, சலுகையின் பலனை நன்றே.

தமிழ்நாடு, கேரளம், மகாராஷ்டிரம் மற்றும் மேற்கு வங்காளம்
ஆகிய மாநிலங்களுக்கு மட்டுமே, ஸ்டாக் உள்ளவரை இந்த சலுகை.

C I B A Cosmetics

# ராமாயணம்

## ராஜாஜி

## 33. களங்கமற்ற உள்ளம்

பரதனும், பரிவாரமும் வெகு துரிதமாகவே புறப்பட்டு, வேகமாகப் பிரயாணம் செய்தார்கள். குதிரைகளுக்கு ஆங்காங்கு குளிப்பாட்டித் தீனி போட்டு இரவில் சில இடங்களில் தங்கி எட்டாவது தினம் அதிகாலையில் அயோத்தியா நகரம் வந்து சேர்ந்தார்கள்.

''இதென்ன சாரதியே, நகரம், நான் ஊரை விட்ட போது இருந்த மாதிரி இல்லை. எப்போதும் கலகல வென்று சந்தோஷமாகவே இருக்குமே? இன்று அப்படி இல்லை. காலையில் நகரத்திலிருந்து ஜனங்கள் வெளியே வருவதும் உள்ளே புகுவதுமாக எப்போதும் உள்ள காட்சி இன்று காணவில்லையே?''

இவ்வாறு பரதன் சந்தேகப்பட்டுச் சாரதியுடன் பேசிக்கொண்டேபோனான்.

''ஊருக்கு வெளியே தோட்டங்களில் சந்தோஷ முகங்களுடன் இருக்க வேண்டிய மகளிரும் யுவர்களும் இன்று ஏன் துக்கக் குறிப்புகளோடு காணப்படுகிறார்கள்? எல்லாம் ஏதோ துயர நிலையில் இருப்பதாகத் தோன்றுகிறது'' என்றான்.

''மங்கள வாத்தியங்கள் ஏதும் முழங்கவில்லை; புஷ்பம் அணிந்து சந்தனம் பூசி உல்லாசமாக இருக்கும் நகரவாசிகள் யாரையும் காணவில்லை. ஊரில் வழக்கமாகக் கேட்கும் பேரிகை மிருதங்க ஒலி காதில் விழவில்லை. இது என்ன ஆச்சரியம்! பல கெட்ட சகுனங்கள் காணப்படுகின்றனவே! என் கவலையை அடக்க முடியவில்லை'' என்றான்.

வைஜயந்தம் என்ற கோட்டை வாயில் வழியாகப் பரதனுடைய ரதம் நகரத்துக்குள் பிரவேசித்தது. கடைத் தெருவுகளும் மாளிகைகளும் கோயில்களும் எவ்வித அலங்காரமுமில்லாமல் சரியாக மெழுகிக் கோலமிடாமலும் இருந்ததைப் பார்த்தான். ஜனங்கள் பட்டினி கிடந்த முகங்களோடு காணப்பட்டார்கள். கெட்ட நிமித்தங்களே மேலும் மேலும் காணப்பட்டன. எல்லாவற்றையும் பார்த்துப் பரதன், ஏதோ பெரும் விபத்துத்தான் நடந்திருக்கிறது என்று நிச்சயித்துக்கொண்டான். அதற்காகவே இவ்வளவு அவசரமாக உடனே வர வேண்டும் என்று சொல்லி அனுப்பினார்கள் என்றும் கண்டான்.

தசரதனுடைய மாளிகைக்குள் பிரவேசித்தான். அங்கே தந்தையைக் காணவில்லை; கவலை இன்னும் அதிகரித்தது. உடனே தாய் கைகேயியைப் பார்க்கலாம் என்று அவளுடைய மாளிகைக்குள் புகுந்தான். ஊரிலிருந்து திரும்பி வந்த தன் மகனைப் பார்த்ததும் கைகேயி அவனைக் கட்டி அணைத்துக் கொள்ளத் தன் தங்க ஆசனத்தைவிட்டுக் குதித்து இறங்கினாள்.

அவனும் அவள் கால்களைத் தொட்டு வணங்கினான். மகனை அணைத்து உச்சி மோந்து ''வந்தாயே அப்பனே! மகாராஜனாக இருப்பாய்; பிரயாணம், சுகமாக இருந்ததா? மாமன் முதலானோர் க்ஷேமமா? அங்குள்ளவர்கள் எல்லாரையும் பற்றிச் சொல்!'' என்று மடியின் மீது உட்கார வைத்துக் கொண்டு மிக்க பரிவுடன் கேட்டாள்.

''நான் வந்து சேர ஏழு நாள் ஆயிற்று. அங்கே எல்லாரும் சௌக்கியமாக இருக்கிறார்கள். பாட்டனார், மாமன் யுதாஜித் எல்லோரும் உன் சுகத்தை விசாரித்ததாகச் சொல்லச் சொன்னார்கள். நிறையச் சன்மானங்கள் கொடுத்தனுப்பி யிருக்கிறார்கள். எல்லாம் பின்னால் வரும். நான் அவசரமாக முன் ரதத்தில் வேகமாக வந்தேன். மிக முக்கியமான காரியம்; உடனே வர வேண்டும் என்று இங்கிருந்து வந்த தூதர்கள் என்னை மட்டும் வேகமாக முன்னால் அழைத்து வந்தார்கள். இதற்கென்ன காரணம், அம்மா? மகாராஜாவைப் பார்த்து வணங்க அவருடைய மனைக்குச் சென்றேன். அவர் அங்கே இல்லை. இங்கேயும் அவருடைய ஆசனம் காலியாக இருக்கிறது. இங்கேதானே வழக்கமாகப் படுத்திருப்பார். ஒரு வேளை பெரிய தாயார் மனைக்குப் போயிருக்கிறாரோ? நான் உடனே அவரைத் தரிசித்து வணக்கம் செலுத்த வேண்டும்'' என்றான்.

நடந்த நிகழ்ச்சிகள் ஒன்றும் அறியாத தன் மகனுடைய இந்தக் கேள்விக்கு ராஜ்யாதிகார ஆசையால் மதியிழந்து போன கைகேயி பதில் சொல்கிறாள்:

''குழந்தாய்! உன் தகப்பனார் உலகத்தில் பிறந்தவர்கள் அடைய வேண்டிய சுகபோகங்களையெல்லாம் அடைந்தார். அரசர் மகா பாக்கியவான். பெரும் புகழ் பெற்றவர். செய்ய வேண்டிய பெரிய

வேள்விகளையெல்லாம் செய்து தீர்த்தார். நல்வழியில் நின்றவர்களுக்குப் புகலிட மாக இருந்தார். அவர் அடைய வேண் டிய பரமபதத்தை அடைந்துவிட்டார்!'' என்றாள்.

இதைக் கேட்டதும் பரதன், ''ஐயோ! நான் செத்தேன்'' என்று கதறி, அழகிய நீண்ட கைகளை விரித்துக் கொண்டு கீழே விழுந்தான்.

பின்னர் எழுந்து, அரசனுடைய படுக்கையைப் பார்த்து, ''இந்தப் படுக்கை சூனியமாகப் போயிற்றே'' என்று அங்கவஸ்திரத்தால் முகத்தை மூடிக் கொண்டு கண்ணீர் தாரை தாரையாகப் பெருக, அரச குமாரன் ஏழை அநாதையைப் போல் அழுதான். இளம் யானையைப் போன்ற தேகமும், சந்திரனைப் போன்ற முகமும் கொண்ட வீரன் பூமியில் விழுந்து புரண்டு அழுதான். காட்டில் கோடாரியால் வெட் டித் தள்ளப்பட்ட பெரிய ஆச்சா மரம் போன்று தரையில் கிடந்த மகனைப் பார்த்துக் கைகேயி, ''எழுந்து நில், அரசனே! எழுந்து நில்! தரையில் ஏன் கிடக்கிறாய்? இது அரசனுக்குத் தகாது. பெரியோர்களுடைய பெரு மதிப்பும் நல்ல கீர்த்தியும் பெற்றிருக் கிறாய். சனாதன வேத வழியில் நின்று தருமமும் வேள்வியும் செய்யும் பதவியை அடைந்திருக்கிறாய். உன் மதி ஜோதி மய சூரியனைப் போல் பிரகாசிக் கிறது. உனக்கு ஒரு குறையுமில்லை. மனக் கலக்கத்தை ஒழித்துத் தைரியம் பூண்டு எழுந்து நில்!'' என்றாள்.

களங்கமென்பது துளிக்கூட இல் லாத உள்ளத்தைப் பெற்ற மகான் பரதன். வெகு நேரம் அழுது புரண்டு அலறியபின் எழுந்து தாயைப் பார்த்து, ''அரசன் ராமனுக்கு யுவராஜ்ய அபி ஷேகம் வெகு விமரிசையாகச் செய் வான்; திரும்பி வந்து அதையெல் லாம் பார்க்கலாம் என்கிற ஆசை யோடல்லவா நான் மாமன் வீட்டுக் குப் புறப்பட்டுப் போனேன். இப் போது இப்படியாகி விட்டதே. ஐயோ! என்னால் பொறுக்க முடியவில்லையே! தந்தையின் பிரிய முகத்தைக் காண வில்லையே! என்ன வியாதி? எப்படி



வந்து விட்டது? நான் பக்கத்தில் இல்லாமல் போய் விட்டேனே என் அம்மா! ராமனும் மற்றவர்களும் அல்லவோ புண்ணியம் செய்தவர்கள். தந்தையை உபசரித்து நோயின் உபத்திரவத்தைத் தணித்து வந்தார்கள். அவர்கள் பாக்கியசாலிகள். எனக்கு அந்தப் பாக்கியம் இல்லாமற் போய் விட்டதே! என் உடம்பில் பட்ட மண்ணைத் தம் கையால் பிரியமாகத் துடைப்பாரே. அவர் கைகள் என் உடலில் படும்போது அந்த ஸ்பரிசம் சொல்ல முடியாத ஆனந்தத்தைத் தந்தது! நான் அவருக்குக் கொஞ்சமும் உதவாமல் போய்விட்டேனே! அம்மா! அண்ணன் ராமன் எங்கே? அவனே எனக்குப் பிதாவும் குருவும். உடனே அவனைக் கண்டு அவன் பாதத்தில் விழவேண்டும். இனி அவனே அல்லவோ எனக்குக் கதி? அம்மா, கடைசியாகத் தந்தை எனக்காக என்ன சொல்லி விட்டுப் போனார்? அவருடைய கடைசிச் சொற்கள் என்னவென்று அவர் சொன்ன மொழிகளாகவே நான் கேட்க விரும்புகிறேன்'' என்று இவ்வாறு அழுது கொண்டு பரதன் கேட்டான்.

உண்மைக்கு மாருக ஏதுமில்லாமல் தன் எண்ணத்தை நிறைவேற்றும் கருத்தாகவே கைகேயி பதில் சொன்னாள். பண்பாட்டின் தடை ஒருபுறம், ஆசையின் வேகம் ஒருபுறம் இவற்றுக்கு இடையில் பேசினாள். பரதனுக்காக அரசன் அந்திக் காலத்தில் ஏதும் சொல்லவில்லை என்கிற பொருள் படவும், இன்னும் சொல்லித் தீர வேண்டிய கொடிய நிகழ்ச்சிகளைச் சொல்வதற்கு வசதி ஏற்படவும் பேசினாள்:

''உன் பிதா, 'ஹா ராமா! ஹா லக்ஷ்மணா! ஹா ஜானகி!' என்று கதறிக் கொண்டு பிராணனை விட்டார். உன் பிதாவானவர் அந்திய காலத்தில் சொன்னது இவ்வளவே. 'ராமனும் லக்ஷ்மணனும் சீதையும் திரும்பி வருவதை நான் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. பார்ப்பவர்கள் பாக்கியம் பெற்றவர்கள்' என்று சொல்லி அரசர் இறந்தார்'' என்றாள்.

இதைக் கேட்டதும், ''ஐயோ, பக்கத்தில் ராமலக்ஷ்மணர்களும் இருக்கவில்லையா?'' என்று பரதனுடைய துக்கம் இருமடங்காயிற்று.

''அவர்கள் எங்கே? என்ன காரியமாகப் பக்கத்தில் இல்லாமல் போய் விட்டார்கள்?'' என்று பரதன் கைகேயியைக் கேட்டான்.

அதன் மேல் எல்லாவற்றையும் சொல்லி அவனைச் சமாதானப்படுத்தலாம் என்று எண்ணி, ''அப்பா! உன் அண்ணன் ராமன் லக்ஷ்மணனையும் சீதையையும் அழைத்துக் கொண்டு தண்டகாரண்ய வனத்துக்கு, தவ வேஷம் பூண்டு சென்று விட்டான்'' என்றாள்.

அதைக் கேட்ட பரதன் வியப்படைந்து, ''இது என்ன எனக்கு ஒன்றும் விளங்கவில்லை? ராமன் என்ன குற்றம் இழைத்து இந்தத் தவம் செய்யச் சென்றான்! எந்தப் பிராமணன் சொத்தை அபகரித்தான்? அவன் எந்த நிரபராதியை இம்சித்தான்? அவன் எந்த அந்நிய ஸ்திரீயை விரும்பிப் பிழை செய்தான்? எதற்காக ராமன் தண்டகாரண்ய வனம் போக வேண்டியதாயிற்று? யார் இந்தப் பிராயச்சித்தம் விதித்தது?'' என்று கேட்டான்.

அந்தக் காலத்தில் வனம் போகும் தண்டனை இவ்விதப் பெருங் குற்றங்களுக்குத்தான் விதிப்பது முறையாக இருந்தது. இதன் மேல் கைகேயி விஷயங்கள் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லத் தைரியம் கொண்டு ஆரம்பித்தாள்.

''ராமன் எந்தத் தவறான காரியமும் செய்ய வில்லை; யாருடைய பொருளையும் அபகரிக்கவில்லை. யாரையும் இம்சிக்கவில்லை; எந்த அந்நிய ஸ்திரீ முகத்தையும் கண்ணெடுத்துப் பார்த்ததில்லை. ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடத்துவதாக ஏற்பாடுகள் செய்வதை யறிந்து நான் உனக்காக உன் தந்தையை வரம் கேட்டுப் பெற்றேன். உனக்கு ராஜ்யாதிகாரம் தந்துவிட்டு ராமன் ஊரைவிட்டு வெளியேறிவிட வேண்டும் என்று உனக்காக நான் கேட்டேன். சத்தியத்துக்கு உட்பட்டு முன்கொடுத்த தம் வாக்கை நிறைவேற்றித் தம் தருமத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக மகாராஜா நான் சொன்னதற்கு ஒப்புக் கொண்டார். சீதையையும் லக்ஷ்மணனையும் அழைத்துக் கொண்டு ராமன் வனம் சென்று விட்டான். அந்தப் பிரிவைப் பொறுக்க முடியாமல் தந்தை உயிர் நீத்தார். நீ இப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்பதை யோசிப்பாய். தருமம் தெரிந்தவனாக இருக்கிறாய். ராஜ்ய பாரத்தை ஒப்புக் கொள்ள வேண்டும். உனக்காகவே இதையெல்லாம் செய்தேன். துக்கப்படாதே. மனத்தை நிலையில் நிறுத்திக் கொள். இந்த நகரமும் ராஜ்யமும் உன் ஆதீனத்துக்குச் சுகமாக வந்திருக்கின்றன. கிரமப்படி வசிஷ்டர் முதலிய பிராமண உத்தமர்களைக் கொண்டு தந்தையாரின் உத்தரக் கிரியைகளைத் தாமதமின்றிச் செய்து முடித்து ராஜ்யாபிஷேகம் செய்து கொள்ளுவாய். நீ க்ஷத்திரிய வீரன். தந்தை கையிலிருந்து ராஜ்யம் பெற்ற அரசகுமாரன். உன் கடமையைச் செய்'' என்றாள். (தொடரும்)

தீபாவளி வெளியீடு !




ELEGANT

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட

# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகளுக்கு தினசரி உணவிலிருந்து கிடைக்கும் சக்தி போதுவதில்லை. எவ்வளவு சீக்கிரம் அவர்களுக்கு சக்தி கிடைக்கிறதோ அதே வேகத்தில் அது பள்ளிக்கூடத்திலும், விளையாடும் போதும் செலவழிந்து விடுகிறது. இழக்கும் சக்தியை மீட்டுத் தந்து குழந்தைகளைத் துள்ளும் ஆரோக்கியத்துடன் வளர்க்க, தினமும் ஒரு கப் போர்ன்விடா கொடுங்கள். தம் மக்கள் நலம் கருதும் தாய்மார்கள் அனைவரும் இதை ஆமோதிப்பார்களே!

பால், சர்க்கரை, மால்ட், கோகோ இவையாவும் திட்டமாகக் கலக்கப்பட்டதும், போஷாக்குச் சத்து நிறைந்ததுமான ஒரு இனிய பானம் போர்ன்விடா. ஆம், இது ஒரு காட்பரிஸ் தயாரிப்பு!






**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**

**காட்பரிஸ் போர்ன்விடா.**

Bensons/0391/TAM




'நீலத்திரைகடல் ஓரத்திலே நின்று நித்தம் தவம் செய் குமரி'யைப் பற்றி மகா கவி பாடினார். திரைகடல் ஓரத்தில் மட்டுமின்றித் திரைகடலின் நடுவிலும் நின்று அம்பிகை தவமியற்றியிருக்கிறாள். கன்யாகுமரிக் கரையிலிருந்து 1600 அடி தொலைவில் கடலிடை உள்ள பாறையில் தேவி தனது திருவடிகளைப் பதித்துத் தவமிருந்ததால் அப்பாறை 'ஸ்ரீபாதப் பாறை' என்றே வழங்குகிறது.

காருண்யமூர்த்தியான கன்னியன்னை தவம் புரிந்த அதே பாறையில் சுமார் எண்பதாண்டுகளுக்கு முன் சுவாமி விவேகானந்தர் அருந்தவம் புரிந்து கருணைச் சமாதியில் கரைந்தார். கடலில் நீந்திச் சென்று ஸ்ரீபாதப் பாறையில் தேவியைத் தியானித்த விவேகானந்தர் சொல்லவொண்ணாத கருணையின் எழுச்சியை அடைந்தார். மக்களை ஆன்மிகத்தில் மேம்படுத்தும் பணியில் அவரை ஆட்படுத்தியது அந்த அருள் எழுச்சியே ஆகும். நரேந்திரநாதன் விவேகாநந்தராகப் பரிணமிப்பதற்கு உத்வேகம் பிறந்தது கன்னிக் கடலிடை திகழும் கற்பாறையில்தான்.

இன்று இந்தியாவில் ஹிந்து மதமும், உலகில் வேதாந்தமும் தழைப்பதற்கு விவேகாநந்தரின் அரும் பணியே அஸ்திவாரம். அந்த அரும் பணிக்கு அவர் ஆதேசமும் ஆவேசமும் பெற்ற ஸ்ரீபாதப் பாறை சமய உலகின் கேந்திர ஸ்தானங்களில் ஒன்றல்லவா?

'விவேகாநந்தப் பாறை' என்றே பெயர் பெற்றுள்ள அந்தப் பாறையில் ஸ்வாமிஜியின் நூற்றாண்டையொட்டி மகோந்நதமான நினைவாலயம் எழுப்ப முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அகில பாரதத்தையும் சேர்ந்த பெருமக்கள் கொண்ட குழுவின் ஆதரவில் இந்த அற்புதப் பணி நடைபெற்று வருகிறது.

ஸ்வாமிஜியினுடைய சிலை, சிலையைச் சூழ்ந்த சபா மண்டபம், அதையடுத்துத் தியான மண்டபம், தியான மண்டபத்தில் ஸ்வாமிஜியின் வாழ்வை வடித்துக் காட்டும் சிற்பங்கள், அம்பாளின் திருவடிப் பதிவாகப் போற்றப்படும் மேட்டில் ஸ்ரீபாத மண்டபம்—ஆகிய இவற்றை முழுதும் கருங்கல் திருப்பணியாகவே கம்பீரமாக நிருமாணிப்பதற்கு ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

கடற் கரையிலிருந்து விவேகாநந்தப் பாறைக்குப் படகுப் போக்குவரத்து நடத்துவதும் ஞாபகார்த்தத் திட்டத்தின் அம்சமாகும்.

''புனித ஆவேசம் பெற்றவர்களும், ஆண்டவனிடம் உள்ள அழியா நம்பிக்கையால் சக்தி பெற்றவர்களும், ஏழையர் — இழிந்தவர்— ஒடுக்கப்பட்டவர் ஆகியோரிடமுள்ள அநுதாபத்தால் செயலூக்கத்தில் சிம்மமாக ஈடுபட்டவர்களுமான ஒரு லட்சம் ஆடவரும் பெண்டிரும் இந்நாட்டின் நாற்றிசையும் சஞ்சரித்து விமோசன மந்திரத்தை, உதவி புரியும் மந்திரத்தை, சமூகத்தை உயர்த்தும் மந்திரத்தை, சமத்துவ மந்திரத்தைப் பரப்புவர்'' என்று ஸ்வாமிஜி கூறினார் அல்லவா? அப்படிப்பட்ட தொண்டர் படை ஒன்றை உருவாக்கிக் கன்யாகுமரியிலிருந்து அனுப்பி வைப்பதற்கு அடிப்படையான மூலதனம் ஏற்படுத்தவும் ஞாபகார்த்தக் குழு உத்தேசித்திருக்கிறது.

இந்த அரும் பெரும் பணிகளுக்கு ரூ. 80 லட்சம் தேவைப்படுவதாக மதிப்பீடு செய்யப்பட்டது. அகில பாரதத்திலும், குறிப்பாக எல்லா ராஜ்ய அரசாங்கங்களின் உதவியாலும் இதுவரை ஐம்பது லட்சம் ரூபாய் வசூலாகியுள்ளது. தமிழக அரசாங்கம் மூன்று லட்ச ரூபாய் செலவில் கரையிலும் பாறையிலும் படகுத் துறை கட்டும் பணியை முற்றிலும் தானே மேற்கொண்டிருப்பது குறிப்பிடத் தக்கது.

1970 மார்ச் இறுதிக்குள் நினைவுச் சின்னப் பணி முழுவதையும் நிறைவேற்ற உத்தேசிக்கப்பட்டுள்ளது.

வருணாலயத்தில் எழும்பும் இந்தக் கருணாலயத்துக்கு நன்கொடை வழங்க விரும்புவோர், 'செயலாளர், விவேகாநந்தப் பாறை நினைவுச் சின்னக் குழு, 12, பிள்ளையார் கோவில் தெரு, திருவட்டீசுவரன் பேட்டை, சென்னை-5' என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்.

(புகைப்படம்: விவேகாநந்தர் நினைவுச் சின்னத்தின் மாதிரி.)

# சிலையைத் தேடி.. 5

மழைக் கோட்டணிந்த மர்ம மனிதனின் பெயர் 'சுவாங்கி' — கம்யூனிஸ்ட் ஒற்றறியும் இலாகாவில் புகழ் பெற்ற புள்ளி..

அவர்கள் போய் விட்டார்கள். ஆனாலும் நாம் கொஞ்ச நேரம் வரை இங்கேயே இருப்பது நல்லது..

நம்மிடம் ரகசியச் செய்தி இருப்பது அவர்களுக்குத் தெரிந்திருக்குமோ?

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ரமணி..

ஒரு மணி நேரம் அலைந்து தேடியும் அந்த குழந்தைகளின் இருப்பிடம் தெரியவில்லை. ஆத்திரமும் அலுப்பும் அடைந்த அவன் ஸ்டேஷன் அதிகாரியை அழைத்து....

கவனமாக இரு. அந்த இரு குட்டிப் பிசாசுகளைப் பற்றி ஏதாவது செய்தி கிடைத்தால் உடனே எனக்குத் தெரிவி.

அப்படியே செய்கிறேன் சார்.

மழைக் கோட்டு மனிதன் போய் விட்டான். ஆனால் ஸ்டேஷன் மாஸ்டர் விளக்குடன் இவர்கள் பதுங்குமிடம் வந்த போது நிலா திரும்பிவிட்டாள்....

அந்தச் 'சைத்தான்' போய் விட்டது குழந்தைகளா! இனி நீங்கள் வெளியே வரலாம்.

இ..ஷ்! எங்களை எப்படி பயப் பட வைத்து விட்டீர்கள்?

நீங்கள் அந்த ஒன்று அறைப் பார்த்து, விட்டுத்தான் அந்தக் 'கம்யூன்' பேயைச் சாமர்த்தியமாக வேறு பக்கம் இழுத்துப் போனோம்.

நீங்கள் ரொம்ப நல்லவர் தாத்தா. நல்லவேளை யாக..

உஷ்.. ஷ்..

நல்ல மனம் படைத்த அந்த ஸ்டேஷன் அதிகாரி அவர்களைத் தம் அறைக்கு அழைத்துப் போய்....

நான் தேசியவாதி. கம்யூனிஸ்ட்களின் விரோதி. உங்கள் பசிக்குப் பாலும் ரொட்டியும் புசியுங்கள். இரவு இங்கேயே தூங்கலாம்.

உங்கள் அன்புக்கு நன்றி ஐயா.

மறுநாள் அதிகாலை அந்த அதிகாரி அவர்கள் போக வேண்டிய இடத்துக்குத் வழி கூறி அனுப்பி வைத்தார்..

மிக்க வந்தனம் ஐயா. உங்களை மறக்கவே மாட்டோம்.

எச்சரிக்கையாகப் போய் வாருங்கள்....

வெகுநேரம் அலைந்து களைப்பும், அலுப்பும் கால் வலியும் கூடிய போது....

நாம் எங்கே இருக்கிறோம் என்றே தெரியவில்லை ரவி. அந்தத் தாத்தா கூறிய வழி நான் நினைத்ததைவிட ஒரே குழப்பமாக்கி — விட்டது நம்மை.

இருந்தாலும் மாமா கூறிய அந்த ரகசிய சங்கேத வார்த்தை நினைவிருக்கிறதல்லவா? அதை மறந்துவிடாதே.















## பாதுகாப்பிற்கு ஒரு பூட்டு உள்ளதெனில் அது நவ-தால் ஒன்றே ஒன்றுதான் !

# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால் தான் பாங்குகளும் தொழிற் சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்புமுறையில் வெட்டப் பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற் கேற்ற முறையில் செய்யப் பட்டது நவ-தால். பித்தளை, எஃகினாலான இரட்டைக்கூடு அதை மிகமிக உறுதியாக்கு கிறது. தயாரிப்பவர்கள் : கோத்ரெஜ்-பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்ப தில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடைய வர்கள்.

3 சைஸ்கள் :
50 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

# பக்கத்து வீட்டுப் பிரமுகர்



எழுத்தாளர் திரு பி. எஸ். ராமையாவின் பக்கத்து வீட்டுக்காரர், சர்க்கார் அச்சகத்தில் பணிபுரியும் திரு டி. லட்சுமணசுவாமி. புதுக்கோட்டைக்காரர் 'வத்தலக்குண்டு'க்காரரைப் பற்றிக்கூறுகிறார். ★

நானும் நண்பர் ராமையாவும் பக்கத்து வீட்டுக்காரர்களாகி ஆறு வருஷங்களாகின்றன. இந்த இடத்துக்குப் புதிசாக வந்தவன் நான்தான். அவர் இருபத்தி ஏழு வருடங்களாக இப்போது இருக்கிற வீட்டிலேயே தான் இருக்கிறார்!

நான் இங்கே வந்து சேர்ந்த புதிதில் எங்களுக்குள் அவ்வளவு பரிச்சயம் ஏற்படவில்லை. இரண்டு ஆண்டுகள் கழித்து அவருக்கு மணி விழா சிறப்பாக நடந்தது. அதைப் பற்றிய செய்திகள், படங்கள் எல்லாவற்றையும் பார்த்தபிறகுதான் நான் ஒரு பிரபலமடைந்தவரின் பக்கத்தில் வசிப்பதை உணர்ந்தேன். அதன் பிறகுதான் எங்கள் நட்பு தீவிரமடைந்தது. எங்கள் நட்பில் எப்போதுமே ஈரம் உண்டு. ஆமாம்! கீழ்த் தளத்தில் இருக்கும் எங்கள் வீட்டுத் தண்ணீர்க் குழாயை மூடினால்தான் அடுத்த வீட்டில் மேல் தளத்தில் குடியிருக்கும் அவர் வீட்டுக் குழாயில் தண்ணீர் வரும். அடிக்கடி 'கொஞ்சம் குழாயை மூடறீங்களா?' என்ற குரல் ஒலித்துக் கொண்டேயிருக்கும். எங்களுக்குள் உள்ள மற்றொரு தொடர்பு நாங்கள் குடியிருக்கும் இரு வீடுகளும் ஒரே நபருக்குச் சொந்தம்.

நண்பர் ராமையாவுக்கு எதிலுமே ஓரளவு வயதுக்கு மீறிய வேகம். அறுபது வயதைத் தாண்டிச் சில வருஷங்கள் ஆகிவிட்டன என்பது அவருக்கு நினைவிருப்பதில்லை என்றுதான் நான் நினைக்கிறேன். நடையிலும் வேகம். பேச்சிலும் வேகம். இதேபோல் வெற்றிலை போடுவதிலும் வேகம். கையில் வெற்றிலை பெட்டி இல்லாமல் இவரை வெளியே பார்க்க முடியாது.

பேச ஆரம்பித்தாரானால் உணர்ச்சி பரவசமாகிவிடுவார். அந்த நாளையச் சம்பவங்களானாலும் அவற்றை இப்போது நடப்பதுபோல் விரிவாக, விளக்கமாகச் சொல்லுவார். எழுதி எழுதிப் பழகினதன் காரணமாகப் பேச்சுக்கும் ஒரு நல்ல உருவம் கொடுக்கும் வித்தை இவரிடம் வந்திருக்கிறதோ, என்னவோ?

உப்புச் சத்தியாக்கிரக நாட்களில் தேசிய எழுச்சியில் கலந்து சிறை சென்றவர் இவர். அந்த நாட்களில் அரசியல் கைதிகளுக்கு விசேஷச் சலுகைகளே கிடையாது. பிக்பாக்கெட் கேடிகள், திருடர்கள் எல்லாரையும் இவர்களுடன் சேர்த்துத்தான் பூட்டி வைத்திருந்தார்கள். இவர் விடுதலையாகி வெளிவந்த சில நாட்கள் கழித்து இவர்கூட ஜெயிலில் இருந்த பிக்பாக்கெட் ஒருவனைச் சந்தித்தாராம்! ''என்ன சாமி! பொழைப்புக்கு என்ன பண்ணறே? எங்கே யாவது சான்ஸ் இருந்தா நீங்க கண்ணைக் காட்டிட்டு ஒதுங்கிக்கிங்க. நான் சைஸ் பண்ணிக்கிறேன். உங்களுக்கும் பங்கு உண்டு'' என்றானும்!

இந்த நிகழ்ச்சியைச் சுவைபடச் சொல்லுவார். இந்தக் கேடி அவர் மனசிலே ஒரு கதைக்கான கற்பனையையும் தோற்றுவித்தான். பல வருஷங்கள் கழித்து 'அம்லிக் கரைச் சோமு' என்ற தலைப்பில் ஒரு பிக்பாக்கெட்டையே கதாநாயகனாக வைத்து ஒரு சிறுகதை எழுதினார். அதைப் பேராசிரியர் கல்கி வெகுவாக ரசித்துப் பாராட்டிவிட்டு, ''என்ன ராமையா! நீங்கதான் ஓர் அரசியல் தியாகியாச்சே! ஐந்து ஏக்கரா நிலத்துக்கு மனுப் போடுவதுதானே?'' என்றார். உடனே ராமையா, ''இரண்டு காரணங்களுக்காகப் போடவில்லை. 'ஐந்து ஏக்கரா நிலத்துக்காக ஜெயிலுக்குப் போனான்' என்ற அவப்பெயருக்கு ஆளாகக் கூடாது என்பது முதல் காரணம். இரண்டாவது, இப்போ இருக்கும் மகராஜன் கொடுக்க, பிற்காலத்தில் பதவிக்கு வரும் மகராஜன் அதைப் பிடுங்கிக் கொள்வானோ என்ற பயம்'' என்றார். இவர் அந்த ஐந்து ஏக்கராவுக்கு ஆசைப்படவேயில்லை. சொந்த வீடு கட்டிக்கொள்ளும் வாய்ப்பும் இதுவரையில் கிட்டவில்லை. பல வருஷங்களுக்கு முன் இந்த வீட்டுக்கு முன் இருந்த காலி மனையை வாங்கிப் போடவிலை பேசினார். பேரம் முடியும் தறுவாயில் ஒரு தரகர் உள்ளே புகுந்து விலையை உயர்த்தி





## மகிழ்ச்சியின் காரணம்!

அதிர்ச்சியைத் தாங்கக்கூடிய, நீர் புகாத, காந்தத்தினால் பாதிக்கப்படாத கடிகாரங்கள் கடலுக்குள் மூழ்கி ஆராய்ச்சி செய்கிறவர்களுக்கு அவசியம் தேவை. ஆனால் இப்போது இவ்வித கடிகாரங்களின் மீது பெண்கள் மோகம் கொண்டிருக்கிறார்கள். கொட்டை கொட்டையான எண்களுடன் சிவப்பு, பச்சை, மஞ்சள் ஆகிய நிறங்களில் இக்கடிகாரங்கள் அமைந்துள்ளன.

— யு. பி. ஐ.

விடவே, இவர் அந்தப் பேரத்தைக் கைவிட்டு விட்டார்.

திரைப் படத் துறையில் அந்தக் காலத்திலேயே இங்கிலாந்துக்குப் போய் வந்த முதல்'எழுத்தாளர் என்ற பெருமை இவருக்கு உண்டு. 'ஆன்' என்ற ஹிந்திப் படம் சம்பந்தமாகத்தான். திலீப் குமார், நிம்மி, பிரேம்நாத் போன்ற பிரபல நடிகர்களுக்குத் தமிழ் சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

ஒரு சந்தர்ப்பத்தில் நான் மயிலாப்பூரிலுள்ள என் சகோதரர் வீட்டுக்குப் போயிருந்தேன். முன் இரவு வேளை. போயிருந்த இடத்தில் என் உடல்நிலை திடீரென்று பாதிக்கப்பட்டு விட்டது. என் மனைவிக்குத் தகவல் கொடுக்கும்படி இவர் வீட்டுக்கு டெலிபோன் மூலம் தகவல் கொடுத்திருக்கிறார்கள். என் மனைவிக்கு விஷயம் தெரிந்தவுடன் ஒரேயடியாகப் பதறிப் போய் விட்டாள். அந்த நிலையில் அவளைத் தனியாக மயிலாப்பூருக்கு டாக்ஸியில் அனுப்பக் கூடாது என்ற எண்ணத்தில் ராமையா, தம் மனைவியையே துணையாக அனுப்பி வைத்தார். மனிதாபிமானம் நிறைந்தவர்.

ஒரு வாரப் பத்திரிகைக்குத் தொடர்கதை எழுதிக் கொண்டிருக்கும்போது இவர் திரைப் பட வேலை சம்பந்தமாக பம்பாய்க்குப் போக வேண்டி நேர்ந்து விட்டது. அங்கிருந்து ஒரு வாரத்துக்கான தொடர்கதை அத்தியாயங்களைத் தபாலில் அனுப்பி வைத்திருக்கிறார். அது காரியாலயத்துக்கு வந்து சேரவில்லை. பத்திரிகைக் காரியாலயத்திலிருந்து இவருக்குத் தந்தி பறந்தது. அன்று இரவு கிடைத்த அவகாசத்தில் அந்தத் தொடர்கதைப் பகுதியை மறுபடியும் எழுதி முடித்து, திரைப் பட நிறுவனத்திலிருந்து மூந்நூறு ரூபாய் பணத்தையும் வாங்கிக் கொண்டு மறுநாள் காலை விமானத்தில் சென்னைக்குக் கிளம்பத் தயாரானார். கதைப் பகுதி மறுபடியும் தவறி விடக் கூடாதே என்ற பயம்.

மறுநாள் காலையில் சான்டாகுரூஸ் விமான நிலையத்துக்குக் கிளம்பிய போது டாக்ஸியை மற்றொரு பிரயாணியுடன் பகிர்ந்துகொள்ள நேரிட்டது. பேச்சு வாக்கில் கணேசன் என்ற பெயருள்ள அந்தச் சக பிரயாணி அதே விமானத்தில் சென்னை வழியாக இலங்கைக்குப் போக விருப்பவர்எனத்தெரிந்து கொண்டார். நண்பர் ராமையாவுக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. பத்திரிகைக்கான விஷயதானத்தைக் கணேசனிடம் ஒப்படைத்தார். சென்னை விமான நிலையத்தில் அதை வாங்கிப் போக ஏற்பாடு செய்வதாகச் சொல்லிவிட்டுத் தாதருக்குத் திரும்பினார். சென்னைக்கு 'டிரங்க் கால்'கள் போட்டு மீனம்பாக்கத்துக்கு ஆள் அனுப்பவும் ஏற்பாடு செய்து விட்டார். உரிய காலத்தில் பத்திரிகைக் காரியாலயத்துக்குத் தொடர்கதை போய்விட்டது!

ரேடியோ நாடக விழாவை யொட்டி, வானொலி நிலையம் இவரிடமிருந்து ஒரு மணி நேர நாடகம் ஒன்று கேட்டிருந்தது. நாடகத்தை மனத்தில் உருவாக்கிக் கொண்டிருந்தாரே தவிர எழுதி முடிக்கவில்லை. ரொம்பக் காலதாமதமாகவே அதை எழுதிக்கொண்டு போனார். அவர்கள் அதைப் படித்து விட்டுக் கையைப் பிசைந்தார்கள். "நாடகம் அற்புதமாக இருக்கிறது. ஆனால் இதற்கான நடிக நடிகையரைத் தேடிப் பிடித்து அமர்த்த எங்களுக்கு அவகாசமில்லாமல் போயிற்றே" என்று தவித்தார்கள். அந்த நாடகத்துக்காக அவர்கள் ஒதுக்கியிருக்கும் தொகையைத் தெரிந்து கொண்டு சிறந்த நடிகர்களைத் தாமே ஏற்பாடு செய்வதாக ஒப்புக் கொண்ட ராமையா, தம் ஆப்த நண்பர் சகஸ்ர நாமத்திடம் போனார். நாடகத்தைப் படித்த சகஸ்ரநாமம் தம் ஒப்புதலை உடனே கொடுத்தார். இரண்டே நாட்களில் ஒத்திகை முடிந்தது. ரேடியோ நாடகத்துக்கு நல்ல வரவேற்பு. சகஸ்ரநாமம் அதை மேடையில் நடிக்க ஆசைப்பட்டார். அதற்கேற்ப ராமையா உடனே சில மாற்றங்களைச் செய்து தந்தார். 'தேரோட்டி மகன்' என்ற நாடகம் இப்படித்தான் ஆரம்பித்தது.

அதோ ராமையா கையில் பையுடன் மார்க்கெட்டுக்குக் கிளம்பிவிட்டார். தினசரி கறிகாய் வாங்கப் போவதில் அவருக்கு அலாதி இன்பம். பேட்டி : **கோமதிஸ்வாமிநாதன்**

# ராம்தீர்த் பிரஹமி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும், பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சி யளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும், அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதி யான நித்திரையை அளிக்கிறது.

**SHRI RAMTIRTH YOGASHRAM**

**DADAR – BOMBAY-14**

---

## "YOGIC CLASSES"

எமது சென்னை ஆபீஸில் யோகாசன வகுப்புகள் நடத்தப்படுகின்றன

மதராஸ் பிராஞ்சு : 25, நைனியப்ப நாயக் தெரு, சென்னை – 3

போன் : 34258

---

# சளியும் இருமலும் உடனே மறையும் அனோலியம்

## கோஸ்ட் ரப்

ஆற்றல் மிகுந்த ஆறு மருந்துப் பொருள்கள் அடங்கியது அனோலியம். அவை ஒவ்வொன்றும் ஒருவிசேஷ நிவாரணத்தை வழங்குகிறது. தரமான மருந்துகளுடன் மருத்துவ முறைப்படி தயார் செய்யப் பட்டது. இது உடலினுள் ஊடுருவிச் சென்று விரைவில் குணமளிக்கிறது.

சளி, இருமல், மூக்கடைப்பு ஆகியவற்றை அகற்ற மூக்கு, தொண்டை, மார்பு முதலிய பகுதிகளில் சிறிதளவு அனோலியத்தைத் தடவி விரைவில் குணமடையுங்கள்.

அனோலியம் ஹிதமானது -விரைவில் குணமளிக்கிறது. அனோலியம் மலிவானது.







# அனோலியம்



# கச்சிதமான ஒரு கிளீயர்டோன் இஸ்திரிபெட்டி



## —நிச்சயமாக மின்சார செலவு மிச்சம் வீட்டில்

கிளீயர்டோன் ஆடோமெட்டிக் 'தெர்மோஸ்டட்' இஸ்திரி பெட்டி மிகக் குறைந்த மின்சாரத்தில் இயங்குவதற்கென்றே திட்டமிட்டு செய்யப்பட்டுள்ளது. சூட்டை கூட்டி குறைக்கும் அமைப்பு கொண்டது. செயற்கையிழை, பட்டுத்துணிகளுக்கேற்ற இளஞ் சூடாயினும், பருத்தித் துணிகளுக்கான கடுஞ்சூடாயினும் மிகக் குறைந்த மின்சாரத்தில் நிறைந்த அளவு இஸ்திரி போட முடிகிறது.

வீட்டு வேலைக்கேற்ற 5 பவு (2.27கி.கி) எக்கனமிக்கல் சைஸ் முதல் முரட்டு வேலைக்கேற்ற கனமான 'டெய்லர்' மாடல் வரை, தேவைக்கேற்ற எல்லா திணுசுகளிலும் கிளீயர்டோன் இஸ்திரி பெட்டிகள் கிடைக்கின்றன.

கிளீயர்டோன் நம்பகமான வீட்டுச் சாதனங்களுக்கு நாட்டிலே பேர் பெற்றது. கெட்டில்கள், ஹாட்பிளேட்கள், டோஸ்டர்கள், ஓவன்கள், குக்கிங் ரேஞ்சுகள், வாட்டர் ஹீட்டர்கள் இன்னும் எத்தனையோ. அத்தனையும் நீங்கள் அளித்திடும் பணத்திற்கும் அதிகமான பலனையே தருபவை.

நாடு பூராவும் உள்ள 1500க்கும் அதிகமான கிளீயர்டோன் விற்பனையாளர்கள், விற்பனைக்குப் பின்னும் எப்போதும் சேவை செய்ய காத்திருக்கிறார்கள்.

**Kleertone**

கிளீயர்டோன்
உன்னத
மின்சார
சாதனங்கள்

நேஷனல் ரேடியோ அண்ட் எலக்ட்ரானிக்ஸ் கம் லிட்
(ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையன்ஸஸ் பிரிவு)

## அத்தியாயம் 6

# காரிருளில் ஒரு மின்னல்



# சாருலதா

கி.ராஜேந்திரன்

மணி ஐந்து என்பதை அறிவிக்கும் முகமாக அலாரம் கடிகாரம் கணகண வென்று ஒலித்தது. 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்டிருந்த அந்த விசாலமான படுக்கை அறையில் மெல்லியதொரு ரஜாய் போர்த்திக் கொண்டு சுகமான ஆழ்ந்த நித்திரையில் இருந்த சாரு கண்களைத் திறக்கவில்லை. ஸீரோ வாட் பல்பின் மங்கலான ஒளிக்கு ஒளி ஊட்டுவது போல் ஒரு வெண்மையான கரம் ரஜாய்க்குள்ளே யிருந்து நீண்டு அலாரத்தை நிறுத்தியது. ஒருமுறை புரண்டு ஒரு பெருமூச்சுடன் உள்ளங் கையைக் கன்னத்துக்கு அடியில் வைத்து முழங்காலை மடித்து உயர்த்திச் சுருண்டுகொண்டாள் சாருலதா.

இரண்டு நிமிஷ நேரம் இந்த அதிகாலை மயக்கத்துக்கு இடம் கொடுத்த அவள், உடனே ஏதோ பெரிய தவறு செய்துவிட்டவள் போல் போர்வையை உதறித் தள்ளிவிட்டு விருட்டென்று எழுந்தாள். ஒருவித திட சங்கல்பத்துடன் இயங்குபவளாகக் கட்டிலை விட்டுக் கீழே இறங்கினாள். கழுத்து முதல் கணுக்கால் வரை அலை அலையாக நீண்ட காஷ்மீர் பட்டினாலான 'நைட் கவுன்' அவளுடன் வழுக்கிக் கொண்டே வந்தது. கட்டில் அருகிலேயே நின்று குனிந்தும், நிமிர்ந்தும் தேகப்பயிற்சி செய்தாள். காதோடு ஒட்டிய மாதிரி உயர்ந்தன கரங்கள். உள்ளங்கைகள் தரையில் பதியும் வரை இடுப்பு வளைந்தது. ஒரே சீராக நிதானமாக மூச்சு விட்டபடி குனிந்த பிறகு நெஞ்சு நிறைந்து உயர, காற்றை உள்ளுக்கிழுத்தபடி நிமிர்ந்தாள். இப்படிப் பதினைந்து தடவைகள் செய்து முடிப்பதற்குள் டெலிபோன் மணி ஒலித்தது.

''சாரு ஹியர்.''

''குட் மார்னிங்! 'எக்ஸர்ஸைஸ்' செய்கையில் குறுக்கிட்டுக் கெடுத்து விட்டேனா?''

''டாக்டர்! நியாயமாக நான் இப்போது என்ன செய்ய வேண்டும் தெரியுமா?''

''என்ன?''

''ஒரு வார்த்தைகூடப் பேசாமல் ஃபோனை வைத்துவிட வேண்டும்.''

''அத்தனை கோபமா?''

''இல்லை, அதற்கும் மேலேயே கோபம்!''

''நான் உன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பி வந்தது பிசகு தான் சாரு. ஆனால் கொஞ்சம் யோசித்துப் பார். அந்தக் கூட்டத்தில் ஒருவனாக இருக்க என்னால் முடியாது என்று ஆரம்பத்திலேயே உனக்குத் தெரியப் படுத்திவிட வில்லையா, நான்?''

''உங்களுக்கு டிரங்கால் போடலாமா என்று நினைத்தேன். அப்புறம் வேண்டாம் என்று தீர்மானித்து விட்டேன்.''

''எனக்குத் தெரியுமே, நான்தான் முதலில் பேச வேண்டும் என்று நீ எதிர்பார்ப்பாய் என்று. ஆறு நாட்கள் ஆகிவிட்டதால் நீ சென்னை திரும்பியிருப்பாய் என்ற உத்தேசத்தில் ஃபோன் செய்தேன். ஹாலிடே எப்படி இருந்தது?''

''எனக்கு ஏது விடுமுறை? அதெல்லாம் மற்றவர்களுக்குத்தான். எஸ்டேட் வேலைகள் தலைக்கு மேல் இருந்தன. இதற்குமுன் இருந்த சொந்தக்காரன் ஆப்பிரிக்காவில் வசிக்கிறவன். எதையும் சரியாகக் கவனிக்கவில்லை அவன். மூன்று வருஷங்களாக லாபம் படிப்படியாகக் குறைந்து கொண்டே வந்திருக்கிறது. ஏதாவது ஓரிடத்தில் அதைப் பிரேக் போட்டு நிறுத்த வேண்டாமா?''

''அதுவும் நீ எஸ்டேட்டை விலைக்கு வாங்கிய பிறகு லாபம் அதிகரிக்கலாமே ஒழியக் குறைய விடலாமா?''

''நல்லவேளையாக எஸ்டேட்டுக்கு ஒரு நல்ல மானேஜர் இருந்து வந்திருக்கிறான். இல்லையானால் நிலைமை இன்னும் மோசமாகி யிருக்கும்.''

''உனக்கென்னம்மா, எவனோ வெள்ளைக்காரன் எந்தக் காலத்திலோ பாடு பட்டு உழைத்து மலைச் சாரலை ஸர்வே செய்து, பாதை போட்டுக் காட்டை யெல்லாம் அழித்து, ஊரை உண்டாக்கி, தேநீர்ச் செடி பயிரிட்டு வைத்து விட்டுப் போனான். இன்றைக்குச் சுலபமாக 'செக்' வெட்டி நீ ஒரு எஸ்டேட்டை விலைக்கு வாங்கிவிட்டாய்!''

''அதற்கும் முன்னால் ஒருவன் இந்தத் தேயிலையைப் பறித்து உலர வைத்துப் பானம் தயாரிக்கலாம் என்று கண்டுபிடித்தானே அதைச் சொல்லுங்கள்! இல்லாத போனால் தேயிலையை யார் பயிர் செய்வார்கள்? எஸ்டேட்தான் ஏது?''

''அவன் வாழ்க! அவன் மக்களைடைப் பழக்கத்துக்கு அடிமையாக்கியதால் நீ இன்று கூடை கூடையாக இலையைக் கொடுத்து விட்டுக் கட்டுக் கட்டாக நோட்டை வாங்கப் போகிறாய்!''

''நீங்கள் சொல்வதுபோல் நடந்தால் சௌகரியமாகத்தான் இருக்கும், வேணு. ஆனால் எத்தனை தொல்லைகள் தெரியுமா? ஒரு உதாரணம் பாருங்கள். எஸ்டேட் பங்களாவுக்குப் பின்னால் கொஞ்சம் உருளைக் கிழங்கு பயிர் செய்தார்கள். முதலில் எலிகள் வந்து எல்லாவற்றையும் சாப்பிட்டு விட்டன. எலிப் பொறி வைத்துப் பிடித்தார்கள். பூச்சி வந்தது. பூச்சி மருந்து அடித்து அவற்றை ஒழித்தார்கள். குரங்குகள் வந்து உருளைக்கிழங்கை யெல்லாம் பிடுங்கிக் கொண்டு போய் விட்டன. அவற்றையும் பயமுறுத்தி விரட்டினால் பிறகு முள்ளம் பன்றிகள் வந்தன, இரவோடு இரவாக. மலைப் பிரதேசமல்லவா?''

''தஞ்சாவூரானால் என்ன, ஊட்டியானால் என்ன? விவசாயம் என்றால் வேதனைதான். ஆயிரம் பாடு பட வேண்டும், அறுவடைக்கு முன்னால்.''

''ஒப்புக் கொள்கிறீர்களா? நாக்கை நீட்டச் சொல்லி விட்டுச் சீட்டு எழுதிக் கொடுப்பது போன்ற சுலபமான காரியம் இல்லை இது!''

வேணு சிரித்தான். ''எதைப் பற்றிப் பேசினாலும் சரி, கடைசி வாக்கியத்தைச் சொல்லி முடிப்பது சாருவாகத்தான் இருக்க வேண்டும், இல்லையா? போகட்டும், டென்னிஸ் கோர்ட்டில் வழக்கம்போல் உன்னை எதிர் பார்க்கலாமா?''

''வரணுமா நான்?''

''ஏன், என்ன சந்தேகம்?''

''உங்களுக்கு என்னோடு ஆடப் பிடிக்குமோ பிடிக்காதோ என்றுதான்.''

''கோபம் இன்னும் பாக்கி இருக்கா என்ன? ஊட்டியில் நடந்ததை மறந்துவிடலாம் சாரு. என்ன சொல்கிறாய்?''

''ஒரு மணி நேரத்தில் கிளப்பில் சந்திக்கலாம் என்கிறேன்.''

''ரைட், அப்போ ஆறரை மணிக்குப் பார்க்கலாம்.''

''வேணு....''

''என்ன சாரு?''

''ஒன்றுமில்லை.''

''என்ன விஷயம்? சொல்லேன்!''

''அன்று ஊட்டியிலிருந்து நீங்கள் சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பி வந்து விட்ட போது...''

''வந்தபோது...''

''என் வாழ்க்கையை விட்டே நீங்கள் ஒதுங்கிப் பிரிந்துபோவது போல் இருந்தது. எனக்கு இருந்த ஒரே ஒரு நண்பரையும் இழந்து விட்டேனே என்று தவித்துப் போனேன். துக்கம் தாங்க முடியவில்லை.''

டெலிபோன் தொடர்பு நீடித்தால் தன் துயர உணர்ச்சி மறுபடியும் பொங்கிப் பிரவாகம் எடுக்கும் என்று அஞ்சியவள் போல் சாரு டக்கென்று ரிஸீவரை வைத்து விட்டாள். அடி உதட்டைக் கடித்துக் கொண்டு கண்களை மூடித் தன்னைக் கட்டுப் படுத்திக்கொண்டாள். சில விநாடிகளுக்குப் பிறகு தேகப்பயிற்சி தொடர்ந்தது.

* * *

டாக்டர் வேணு புன்னகையுடன் தன் கையிலிருந்த டெலிபோன் ரிஸீவரையே சற்று நேரம் பார்த்தான். அவன் முகத்தில் திருப்தி நிலவியது. குழந்தையைத் தொட்டிலில் இடுவது போல் ரிஸீவரை அதற்குரிய இடத்தில் வைத்தபோது மேஜையின் மீதிருந்த 'லெட்டர் பே'டில் அவன் பார்வை லயித்தது. சாரு லதாவுடன் டெலிபோனில் பேசிக் கொண் டிருக்கையிலேயே தன்

தீவிரமாகச்
செயல்புரிவது



தடவ
இதமானது

# ஜலதோஷத்திற்கு ரபெக்ஸ்

மார்பில் சளியின் அடைப்பை அகற்ற—முதுகிலும் மார்பிலும், மூக்கைச் சுற்றியும், மூக்கிற்குள்ளும், நெற்றியிலும் ரபெக்ஸ் தடவுங்கள். மூக்கடைப்பைப் போக்க, இதமான அதன் ஆவியை முகருங்கள்.

**இப்பொழுது 3 பாக்கிங்குகளில் கிடைக்கிறது**
65 கிராம் மற்றும் 20 கிராம் ஜாடிகள், 6 கிராம் டின்.
**ஒரு ஜாடி அல்லது டின் எப்பொழுதும் கைவசம் இருக்கட்டும்.**

அலெம்பிக்கின் ஹோம்ப்ரோ பிரிவின் தயாரிப்பு







**ரபெக்ஸ்: தீவிரச்செயல் புரியும், இதமான ஜலதோஷ நிவாரணி.**

everest/614a/ACW tm

வலக்கரத்தில் இருந்த பென்சிலால் கடிதம் எழுதும் தாளில் சாரு — சாருலதா, சாரு — சாருலதா என்று திரும்பத் திரும்பத் தான் எழுதி யிருப்பதை — அதை எழுதுகிறோம் என்ற உணர்வே இல்லாமல் எழுதியிருப்பதைப் பார்த்தான்.

'இருநூறு பக்க நோட்டுப் புத்தகத்தை ஸ்ரீராமஜெயம் எழுதி நிரப்ப முற்பட்டிருக்கும் அம்மாவிடம் இதைக் காட்டினால்....'

வேணு வாய் விட்டுச் சிரித்தபடியே குப்பைத் தொட்டியில் போடும் எண்ணத்துடன் தாளை எடுத்து மடித்துக் கிழிக்க முற்பட்டான். சட்டென்று அவன் கரம் தயங்கியது. மடித்ததைப் பிரித்துப் பார்த்தான். பிறகு மேஜை டிராயரைத் திறந்தான். அதில் மேலாகச் சாருலதாவின் புகைப்படம் அலங்காரமான ஃபிரேமுக்குள் சிறைப்பட்டுக் கிடந்தது. 'டு மை குட் ஃபிரண்ட்' என்று அதில் எழுதிக் கையெழுத்திட்டிருந்தாள் சாரு. படத்தை மேஜை மேல் நிற்க வைத்துச் சில விநாடிகள் கண் இமைக்காமல் பார்த்தான் வேணு. பிறகு புறங்கையால் படத்தை அலட்சியமாக ஒரு தட்டுத் தட்டியபடியே, ''சாரு இதே படத்தில் நீ எழுதி யிருப்பதை நீயே அடித்துவிட்டு 'டு மை டியர் ஹஸ்பண்ட்' என்று எழுதப் போகிறாய்'' என்று வாய் விட்டுச் சொன்னான். கையிலிருந்த தாளையும் மேஜையின் மீதிருந்த புகைப்படத்தையும் டிராயருக்குள் வைத்து மூடிப் பூட்டினான். அறையை விட்டு வெளியே வராந்தாவுக்கு வந்தான்.

'சாரு! உன்னுடைய மனம் இன்னும் ஒரு கம்ப்யூட்டர் இயந்திரமாகிவிடவில்லை. அதில் இன்னும் உணர்ச்சிகள் ஒட்டிக் கொண்டிருக்கின்றன. அவற்றை நீ துடைத்தெறிய அனுமதிக்காமல் நான் நடந்து கொண்டால் போதும்!'

பலபலவென்று பொழுது விடியும் நேரம். வாசலில் வேணுவின் தாயார் போட்டிருந்த கோலத்துக்கு ஏகப் போட்டி. ஐந்தாறு குருவிகள் அதன் மீதமர்ந்து மாவைக் கொத்தி உண்ணத் தொடங்கின. அப்பொழுதுதான் விழித்தெழுந்த அணில்கள் இரண்டு 'கீ கீ' என்று அலறியபடி தென்னை மரத்திலிருந்து கண்ணிமைக்கும் நேரத்தில் இறங்கி வாலைத் தூக்கிக் கொண்டு ஒரே ஓட்டமாக ஓடி வந்தன. குருவிகள் விர்ரென்று பறந்து போய் மறுபுறமிருந்த வேப்ப மரத்தில் தஞ்சம் புகுந்தன. காகம் ஒன்று அணில்களை விரட்டி விட்டுக் கோல மாவை வேகமாகக் கபளீகரம் செய்யத் தொடங்கியது. இதைப் பார்த்து மகிழ்ந்ததால் தானோ என்னவோ வேப்ப மரத்தில் ஒரே அட்டகாசம். எல்லாக் குருவிகளுமாகச் சேர்ந்து கீச்சிட்டுக் குதூகலித்தன. தேன் சிட்டு ஒன்று இதையெல்லாம் லட்சியம் பண்ணாமல் தன்பாட்டுக்குப் பறந்தபடியே பூவிலிருந்து தேனை உறிஞ்சியது. இரண்டு புல் புல் பட்சிகள் டெலிபோன் கம்பி மேல் அலங்காரமாய் அமர்ந்தன. பம்மிச் செண்டாகப் பூத்த இக்ஸோரா உதய சூரியனின் சிவப்புக்குச் சவால் விட்டது. இலேசாக மழை பெய்திருந்ததால் பவழமல்லியின் மணத்துடன் மண் வாடையும் கலந்து வந்தது.

'சாருலதாவும் இப்போது மலர்களைப் பார்ப்பாள்' என்று நினைத்துக் கொண்டான் டாக்டர் வேணு. 'ஆனால் அவை ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட அறையில் அழகுக்காக வைக்கப்பட்டிருக்கும் பிளாஸ்டிக் பூக்களாக இருக்கும்! அவளும் தேன் சிட்டுக்களைக் காண்பாள். அவை ஜன்னலை மறைக்கும் திரைச் சீலையில் அச்சடிக்கப் பட்ட படங்களாக இருக்கும். நான் இங்கு பட்சிகளின் கானத்தைக் கேட்கும்போது அவள் அறையில் டேப் ரிகார்டரிலிருந்து மேனாட்டு இசை எழும். பவழமல்லியின் மணத்தை நான் நுகரும்போது அவள் கிரிஸ்டீன் டயார் செண்டைத் தன்மேல் 'ஸ்ப்ரே' செய்து கொண்டிருப்பாள்!'

'வருடாந்திர லாப நஷ்டக் கணக்குகளையும் மேலும் மேலும் பணம் பண்ணுவது எப்படி என்பது பற்றியுமே சிந்தித்துச் சிந்தித்து நுண்ணிய உணர்வுகளுக்குத் தன் மனதில் இடமே இல்லாமல் செய்து கொண்டு விட்டாளோ, சாருலதா?' என்று டாக்டர் வேணுகோபால் அஞ்சியதுண்டு. அப்படி இல்லை. அவள் மனம் இன்னும் அந்த அளவுக்கு மரத்துப் போகவில்லை என்பது இப்போது அவளுடன் டெலிபோனில் பேசிய போது உறுதிப் பட்டது. இதற்குமுன் — உதகையில் பொட்டானிகல் கார்டனில் அவளுடன் கழித்த சில மணி நேரத்தில் டாக்டர் வேணுகோபாலுக்கு ஏற்பட்டிருந்த பெரிய ஏமாற்றம் இப்போது ஓரளவுக்குக் குறைந்தது.

அங்கு — உதகைப் பூங்காவனத்தில் வேணுகோபால் சொன்னான்: ''நீ அணிந்திருக்கும் புடவையே ஒரு புஷ்பக் கண்காட்சிதான். எத்தனைவிதமான வர்ணங்களில் எத்தனை விதப் பூக்கள் இதில்!''

''இது ஒன்றும் அப்படி உசத்திப் புடவை இல்லை. எழுபத்தைந்து ரூபாய்

தான். இதைப் போய்ப் புகழ வேண்டாம்'' என்றாள் சாருலதா.

''ஒரு விதத்தில் நீ சொல்வது சரி தான், சாரு. உயிருள்ள மலர்கள் ஆயிரக்கணக்கில் கண்ணெதிரே பூத்துக் குலுங்கும்போது புடவையில் அச்சடித்த பூக்களை யாராவது ரசித்துக் கொண்டிருப்பார்களா? அதோ பார், அந்த ரோஜாவை. ஒட்டுப் போட்டு, ஒட்டுப் போட்டுக் கிட்டத்தட்ட கருமை நிறத்துக்குக் கொணர்வதில் வெற்றி கண்டிருக்கிறார்கள். 'சூட்டிலும் ஒரு ருசி, கறுப்பிலும் ஓர் அழகு' என்பார்களே, அதிலுள்ள நயம் இந்தக் கறுப்பு ரோஜாவைப் பார்த்தால்தான் புரிகிறது.''

''வேஸ்ட் ஆஃப் டாக்ஸ் பேயர்ஸ் மணி'' என்றாள் சாருலதா. ''மக்களை வருத்தி எடுத்து வரி வசூலித்து இப்படியெல்லாம் பூவுக்கும் எருவுக்கும் பணத்தை விணடிப்பானேன்? அதைவிட ஏதாவது தொழிலகத்தில் லாபகரமாக முதலீடு செய்யலாம்!''

''நீ ஏன் எதையும் எப்போதும் பணத்துடன் இணைத்துப் பார்க்கிறாய், சாரு? புடவையைப் புகழ்ந்தாலும் தோட்டத்தை ரசித்தாலும் உடனே அதற்கான செலவைப் பற்றியே கணக்குப் போடுகிறாயே, ஏன்?''

''அதில் என்ன தவறு? ரூபாய் பைசாக் கணக்குப் பார்க்க நான் கூச்சப்படுவதில்லை. நான் கருமி இல்லை வேணு. ஆனால் செலவழிக்கும் பணத்துக்கு அதிகமாக வருவாய் கிடைக்குமா என்றோ அல்லது அதற்கு ஈடான 'குட்வில்' கிடைக்குமா என்றோ யோசிக்காமல் இருப்பதில்லை. பொட்டானிகல் கார்டனில் உலவி வரும்போது நாலு பேருக்குக் காட்ட வேண்டும் என்பதற்காகப் புதிதாகப் பனாரஸ் பட்டுப் புடவையும் காஷ்மீர் சால்வையும் வாங்கி அணிய மாட்டேன்.''

''ஆனால் அதையே ஒரு பிஸினஸ் லஞ்ச் என்றால் வாங்கி அணியத் தயங்க மாட்டாய் இல்லையா?'' என்றான் வேணுகோபால் சிரித்துக் கொண்டே. ''சாரு! நாட்டு வளத்தைக் கவனிப்பதுடன் மக்களின் மனவளத்தை வளர்க்கும் பொறுப்பும் அரசாங்கத்துக்கு உண்டு. அதற்காகத்தான் பொட்டானிகல் கார்டன், டூரிஸ்ட் பங்களா போன்றவையெல்லாம். அதோ பார். இந்தச் சூழ்நிலை அந்த இளம் காதலர்களுக்கு எவ்வளவு இதமாக இருக்கிறது. உடலாலும் உள்ளத்தாலும் அவர்கள் அப்படி ஒன்றி இருப்பதற்குக் காரணம் என்ன? இத்தனை பேர் இங்கே இருந்தும் இந்தத் தோட்டத்தின் அழகில் அவர்கள் கட்டுண்டதால் தனிமையை உணர்கிறார்கள்.''

''இன்னும் கொஞ்ச நாளைக்குத்தான். அப்புறம் கலியாணமாகிக் குழந்தை குட்டி என்று ஏற்பட்டால் போச்சு. வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டத் தெரியாமல் விழிப்பார்கள். வாழ்க்கை வேதனையாகும். பிறகு காதல் ஏது?''

''தவறு சாரு! குழந்தைகளால் பெற்றோரிடையே உள்ள காதல் பலப்படுமே ஒழியப் பலவீனமடையாது. வாழ்க்கையில் எதிர்ப்படும் சிரமங்களைச் சமாளிக்கும் உறுதியையும் சக்தியையும் அந்தக் காதலும் குழந்தைகள் காட்டும் அன்பும்தான் அவர்களுக்கு அளிக்கின்றன. அதோ அந்தப் புல் சரிவிலே பார்!....''

டாக்டர் வேணுகோபால் சுட்டிக் காட்டிய இடத்தில் கிட்டத்தட்ட செங்குத்தாகவே அமைந்திருந்தது புல் சரிவு. அதில் ஏறியும் இறங்கியும் உருண்டும் புரண்டும் விளையாடின நண்டும் சுண்டுமாக நாலைந்து குழந்தைகள். டாக்டர் குறிப்பிட்ட திக்கில் சாருலதா நோக்கியபோது வேணுகோபால் அவள் முகத்தை உன்னிப்பாய்க் கவனித்தான். சூள் கொட்டி அசுவாரசியமாகச் சாருலதா பார்வையை வேறு திசையில் திருப்பியதும் டாக்டருக்கு வியப்பாக இருந்தது; அனுதாபமும் பிறந்தது.

பூங்காவனத்தில் போட்டிருந்த குறுகலான பாதைகள் பலவற்றுள் ஒன்றில் அவர்கள் அருகருகே நடந்து சென்றார்கள். ஒரே சமயத்தில் பக்கததில் பக்கத்தில் இரண்டு பேர்கள் நடக்கக் கூடப் போதிய இடமில்லாத அகலக் குறைவான பாதை. டாக்டர் வேணுகோபாலின் மருமான் பாலு—ஒன்றரை வயதான குழந்தை — தோட்டத்திலிருந்து ஒரு ரோஜா மலரைப் பறித்து வந்து நீட்டுவான். மாமாவைக் குனிந்து முகர்ந்து பார்க்கச் சொல்லுவான். மூக்கின் அருகே கன்னக் கதுப்பில் மலரைத் தடவிச் சிலிர்ப்பை ஏற்படுத்திவிட்டுச் சடக்கென்று அப்பால் எடுத்து விடுவான். கெஞ்சினால் மீண்டும் ஒரு வினாடி நேரம் முன் போலவே மெய் சிலிர்ப்பை ஏற்படுத்துவான். அந்த மலரின் புதுமையும் மென்மையும் எழிலும் மணமும் போலவே, தோற்றமும் சருமமும் உருவமும் உடலும் கொண்ட சாருலதாவுடன் அவன் மீது பட்டும் படாமலும், உரசியும் உரசாமலும் அந்தப் பாதையில் நடக்கும்போது டாக்டர் வேணு கோபாலுக்குக் குழந்தையின்

அந்த விளையாட்டு ஞாபகம் வந்தது. ஆனால் அன்று அவன் உணர்ந்தது முழு இன்பம். இன்று இந்த அநுபவத்தில் இனிமையைக் காட்டிலும் இன்ப வேதனை சற்றுத் தூக்கலாகவே இருந்தது !

அவன் கேட்டான்: ''பழனியாண்டவனுக்குப் பாலாபிஷேகம் செய்து பார்த்திருக்கிறாயா நீ ?''

''பழனியென்ன? இந்தியாவிலுள்ள எல்லா ஸ்தலங்களுக்குமே போய்த் தரிசித்து வந்தாகி விட்டது.''

''நிஜமாகவா? யார் நம்புவார்கள்? சாருலதா ஸ்தல யாத்திரை போய் வந்தாள் என்றால் ? எப்போது போயிருந்தாய் சாரு ?''

''போன ஜன்மத்தில் !''

வேணு சட்டென்று நின்றான். ''போன ஜன்ம நினைவுகள் உனக்கு ஏற்படுவது உண்டா ? விசித்திரமாக இருக்கிறதே ?''

''எப்போதாவது தோன்றும் டாக்டர். அது சரி, உங்களுக்குத் திடீரென்று பழனியாண்டவன் நினைவு வருவானேன் ?''

''நாலு நாட்கள் முன்னால் வரை சோபனா அக்கா என்னுடன்தான் இருந்தாள். குழந்தைக்குத் திருப்பதியில் மொட்டை அடிக்க வந்தவள் ஒரு வாரம் தங்கி யிருந்தாள். இங்கே விளையாடிய குழந்தைகளைப் பார்த்ததும் எனக்குப் பாலுவின் நினைவு வந்தது. ஒரே ஒரு ஜட்டியை மாட்டிக் கொண்டு அவன் ஒரு குச்சியுடன் இங்குமங்கும் ஓடுவான். எனக்கென்னவோ பாலமுருகன் எங்களிடம் கருணை கொண்டு கோவணாண்டியாகக் கையில் வேலுடன் வந்திருப்பது போல் தோன்றும்! என்ன விஷமம், என்ன விஷமம்! அத்தனையும் பண்ணி விட்டு ஒரு 'களுக்'குச் சிரிப்பில் நம்மை மயக்கி விடுகிற திறமை ஆண்டவனுலன்றி யாரால் முடியும்? 'முருகா எங்கே ?' என்றால் கழுத்தில் தொங்கும் சங்கிலியின் டாலரில் உள்ள முருகனைக் கையி லெடுத்து முத்தம் கொடுப்பான். மாமா பக்கத்தில்தான் படுத்துக் கொள்வேன் என்று பிடிவாதம் பிடிப்பான். வாயில் விரல் போட்டுக் கொண்டு தூங்கும்போது பரம சாதுவாய்த் தோன்றுவான். ஜட்டி நெகிழ்ந்து தங்க அரைஞாண் சிறிதளவு பளிச்சிடும். மூடிய நிலையில் உள்ள பாதாம் பருப்புக் கண்கள், மாம்பழக் கதுப்புக் கன்னங்கள், கொழு கொழுவென்ற உடம்பு. அவனை ஒவ்வொரு அங்கமாகப் பார்த்து ரசித்துக் கொண்டே இருந்தால் எனக்குத் தூக்கமே வராது!''

சாருலதா கைக் கடிகாரத்தைப் பார்த்தாள். ''நேரமாகிறதே, டாக்டர் ! நாம் திரும்புவோமா ?''

பாடகர் சுருதியோடு இழைந்து ஆலாபனை செய்கையில் பிடில் வித்வான் அழுத்தம் திருத்தமாக அபஸ்வரங்களைக் கொட்டியது போல், தொனித்தது சாருலதாவின் கேள்வி, வேணுகோபாலின் காதுகளுக்கு.

ஒரு நீண்ட ஏமாற்றப் பெருமூச்சு கிளம்பியது அவனிடம். அன்று ஏற்பட்ட அந்த ஏமாற்றம் இன்று ஓரளவு தணிந்தது. 'டாக்டர் ! எனக்கிருந்த ஒரே நண்பரையும் இழந்து விட்டேனே என்று தவித்துப் போனேன். துக்கம் தாங்க முடியவில்லை' என்றாளல்லவா சாருலதா டெலிபோனில்? அவள் உள்ளத்தில் ஈரப் பசை இருப்பதை உணர்த்த வேறு என்ன அத்தாட்சி வேண்டும் அவனுக்கு ?

* * *

''வேணு! என்னடா கோழியையும் குருவியையும் பார்த்துண்டு நின்னுண்டிருக்கே. நேரமாகலே? எட்டு மணி அடிச்சா மைல் நீளத்துக்கு வாசல்லே கியூ நிற்குமே?'' வேணுவின் தாயார் மீனாட்சி ஒரு கையில் காப்பி டம்ளரும் மற்றொரு கையில் அவனுடைய டென்னிஸ் மட்டையுமாக வாசலுக்கு வந்தாள்.

''அம்மா ! அக்கா போனதும் வீடு வெறிச்சென்று இருக்கும்மா. பாலுவையாவது நீ கொஞ்ச நாளைக்கு இங்கே வைச்சுக்கிறதாகச் சொல்லக் கூடாது?'' என்றான் வேணு காப்பி டம்ளரை வாங்கிக் கொண்டே.

''அவள் விட்டு வைப்பாளா ? 'இந்த வீட்டிலேயே ஒரு குழந்தை தவழ ஏற்பாடு செய்யேன்'னு சொல்லிட்டுப் போயிட்டாள். நேற்றுக்கூட கடுதாசு போட்டிருக்காள். அவள் கல்லூரி சிநேகிதியாம். ஒளியாட்டம் இருக்காளாம்.''

''ஒளியாட்டமா இருக்கிறது என்னம்மா பிரமாதம் ? ரம்பை, ஊர்வசி எல்லாரும் தோற்றுப் போகிற மாதிரி ஒரு பெண்ணைக் கொண்டு வந்து உன் முன்னாலே நிறுத்துகிறேன், பாரு !''

''போடா, நீயும் உன் வேடிக்கையும் !'' டென்னிஸ் மட்டையை நாற்காலி மீது வைத்து விட்டு மீனாட்சி உள்ளே போய் விட்டாள்.

வேணு காப்பியை ரசித்து, உறிஞ்சினான். (தொடரும்)



டெல்லி டெலிபோன் டைரக்டரியை இந்தி மொழியில் இருபதாயிரம் பிரதிகள் அச்சடித்தார்கள். விற்பனை ஆனது ஆறாயிரம் பிரதிகள்தான்!

மதர் இந்தியா - 'முத்து'

மேற்கு ஜெர்மனியில் கடிதங்களை நகரின் பல பாகங்களுக்கும் சாலை வழியே தபால் நிலைய வான்களில் ஏற்றிப் போவதில்லை. பெரிய நகரங்களில் உள்ள பல்வேறு தபால் நிலையங்களைப் பூமிக்கடியில் செல்லும் குழாய்கள் இணைக்கின்றன. இந்தக் குழாய்களின் வழியே மணிக்கு இருபது மைல் வேகத்தில் காற்றின் அழுத்தத்தால் வண்டிகள் விரைகின்றன. இந்த வண்டிகள் ஒரு மணி நேரத்தில் 1,20,000 கடிதங்களைச் சுமந்து போகின்றன. ஒரு மணி நேரத்தில் 20,000 கடிதங்களை அவை போக வேண்டிய நகரங்களுக்கு ஏற்பப் பிரித்துப் போடும் எலெக்ட்ரானிக் இயந்திரங்களையும் உருவாக்கி உபயோகிக்கிறார்கள். - ஸ்காலர்



இப்படி ஒரு விளம்பரம் கொடுத்தார் ஓர் அமெரிக்கர்: "நியூ ஜெர்ஸியிலும் அதன் அருகிலும் உள்ள மோட்டார் ஓட்டிகளுக்கு ஓர் எச்ச



ரிக்கை! இந்த மாதம் பத்தாம் தேதி முதல் என் மனைவி கார் ஓட்டுகிறாள், பச்சைநிற போர்ட் கார். ஜாக்கிரதை!"

விக் எண்ட் - 'பாபு'

இரு பக்கமும் திறந்துள்ள சிறிய அட்டைக் குழாயின் ஒரு துவாரத்தின் அருகில் ஒரு சிறிய துளை செய்து அத்துளையின் மீது ஒரு பட்டாணி (உருண்டையாக உள்ளதை)யை வைத்துத் துளையின் அருகில் உள்ள துவாரத்தின் வழியாக ஊதாமல் அதை ஒரு விரலால் இலேசாக மூடிக்கொண்டு மறு துவாரத்தின் வழியாக மெல்ல ஊத வேண்டும். மெதுவாக விட்டு விட்டு ஊதினால் பட்டாணி எம்பிக் குதித்துக் கொண்டே யிருக்கும். பார்ப்பதற்கும் விநோதமாக இருக்கும். - கமலா



## ஆளுக்கு ஐந்நூறு



மயிலை ரசிக ரஞ்சனி சபையில் 1953ல் அரியக்குடி திரு ராமாநுஜ அய்யங்கார் அவர்கள் கச்சேரி நடைபெற்றது. கச்சேரி முடிவடைந்தது. ரசிகர்கள் அனைவரும் கலைந்து சென்று விட்டார்கள். ஐயங்கார் அவர்கள் நாலைந்து பேர் சூழப் பேசிக் கொண்டே மேடையிலிருந்தும் இறங்கி வந்து கொண்டிருந்தார்.

பின்புறத்தில் இரைந்து யாரோ பேசுவது கேட்டது. திரு அய்யங்கார், "என்ன அங்கே சச்சரவு ?" என்றார்.

"உங்களுக்கு ஒன்றுமில்லை" என்றார் திரு வேங்கட நரசிம்மன்.

"அது சரி. விஷயம் என்னவென்றுதான் கேட்கிறேன் !"

"எங்களுக்குள் ஆயிரம். நீங்கள் கேட்டு முடியுமா ?"

"அட கஷ்டமே! இதற்கா இத்தனை இரைச்சல்? ஆளுக்கு ஐந்நூறாகப் பிரித்துக் கொள்ளுங்களேன். வீண் ரகளை எதற்கு?" என்று பளிச்சென்று கேட்டார் அரியக்குடி.

—இரா. பத்மநாபன்





# அறம் சன்மார்க்கம் சத்தியம்

✲ "வழக்கமாக ஜனவரி மாதத்தில்தான் வள்ளலார் விழா நடத்துவோம். இந்த ஆண்டில் எதிர்பாராத சில காரணங்களால் ஜனவரி மாதத்தில் அந்த விழாவை நடத்த இயலவில்லை. இடையே வள்ளுவர் ஈராயிரம் ஆண்டு விழாவும் இப்போது அண்ணல் காந்திஜி நூற்றாண்டு விழாவும் சேர்ந்து கொண்டது. ஆகவே காலத்தால் வேறுபட்டுக் கருத்தால் ஒன்றுபட்ட இம்மூவருக்கும் ஒரே நேரத்தில் முப்பெரு விழாவாகக் கொண்டாட முடிவு செய்தோம்.

- நா. மகாலிங்கம்

✲ நான் எத்தனையோ விழாக்களுக்காக இந்த ராஜேசுவரி கல்யாண மண்டபத்துக்கு வந்திருக்கிறேன். ஆனால் இன்று இந்த மண்டபத்துக்குள் நுழைந்ததும் ராஜேசுவரி கல்யாண மண்டபத்துக்குத்தான் வந்திருக்கிறோமா? வேறு எங்காவது போய்விட்டோமா என்ற ஐயப்பாடு எழுந்து விட்டது. வண்ண வண்ண ஓவியங்களைக் கொண்டு மண்டபத்தின் தோற்றத்தையே மாற்றியிருப்பதோடல்லாமல், திசையையே கூடத் திருப்பியிருக்கிறார் மகாலிங்கம் அவர்கள்.

- விழாத் தொடக்கவுரையில்
முதல் அமைச்சர் மு. கருணாநிதி

✲ மனித வாழ்க்கையின் குறைந்த எல்லை அதாவது மினிமம் (**Minimum**) அன்பு நிறைந்த எல்லை – மாக்ஸிமம் (**Maximum**) அருள். இதைத்தான் வள்ளுவர் தம் அறத்துப் பாலில் தெளிவுபடுத்துகிறார். இந்த அன்புக்கும் அருளுக்கும் இடையிலே நின்று அறத்துப்பாலை வாழ்ந்து காட்டியவர் காந்திஜி.

- டாக்டர் மு. வ.

✲ காந்திஜிக்குப் பெருமை தேடிக் கொடுக்கவா இந்த விழா? வடபழனி ஆண்டவனுக்குப் பெருமை தேடிக் கொடுக்கவா நாம் அங்கே போகிறோம்? இல்லை! காந்தி, வள்ளலார், வள்ளுவர் போல் நம்மால் வாழ முடியுமா? அவர்களிடம் விளங்கிய அருள், நெறி, தூய்மை இம்மூன்றையும் நம்மால் பின்பற்ற முடியுமா என்று சோதித்துக் கொள்ளத்தான் இந்த விழா.

- டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார்

✲ இந்த மூன்று பெரியோர்களுடைய பெயர்களைச் சொல்வதற்கும் நமக்குத் தகுதி, யோக்கியதை இருக்கிறதா என்று நினைக்கும்போது இந்த மாதிரிக் கூட்டத்தில் கூனிக் குறுகித்தான் நிற்க வேண்டியிருக்

ரசிகப் பெருமக்களும் முப்பெரு விழாவின் தொடக்கவுரையை நிகழ்த்திய முதல்வர் திரு மு. கருணாநிதியும்




பொருளற்றார்
பூப்பர் ஒருகால்
அருளற்றார்
அற்றார் மற்றாதல் அரிது

- வள்ளுவர்

அருளும் பொருளும் நிறைந்தவர்கள் ஏற்பாடு செய்திருந்த விழா!

இச்சாதிச் சமய விகற்பங்கள் எல்லாம் தவிர்ந்தே எவ்வுலகும் சன்மார்க்கப் பொது வடைதல் வேண்டும்.

- வள்ளலார்

சாதி சமய பேதமின்றிப் பொதுமக்கள் குழுமியிருந்த விழா!

சத்தியத்தை முற்றிலும் உணர்வதென்பது ஒருவன் தன்னைத் தானே உணர்ந்து கொள்வதாகும். நான் சத்தியத்தைத் தேடுபவனே! என் குறைபாடுகளை நான் மனநோயோடுணர்கிறேன். இதிலேயே என் பலம் அனைத்தும் உள்ளது.

- மகாத்மா காந்தி

இந்தத் தத்துவத்தைப் புரிந்துகொண்ட பல பேச்சாளர்கள்கலந்துகொண்டவிழா!

கிறது. காரணம், நாம் வாழ்வதற்காக அவர்கள் வாழ்ந்து காட்டினார்கள் என்பதை மறக்கிறோம். நாம் வணங்குவதற்காகத் தான் அவர்கள் வாழ்ந்தார்கள் என்று பேசுகிறோம்.

- நீதிபதி எம். எம். இஸ்மாயில்

✿ "நான் படித்த ஒழுக்க நூல்களிலே தலைசிறந்தது திருக்குறள்" என்றார் ஆல்பர்ட் ஸ்வைட்ஸர்.

"இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த மனிதர் ஆல்பர்ட் ஸ்வைட்ஸர்" என்றார் ஜவாஹர்லால் நேரு.

- துணைவேந்தர் சுந்தரவடிவேலு

✿ பொல்லாத உலகத்துப்
புழுதிபடா நாயகர்கள்
கல்லாத நெஞ்சத்தும்
கடவுளென நின்றவர்கள்

- கவிஅரங்கத் தலைவர் அழ. வள்ளியப்பா

✿ எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள தலைப்பு: வள்ளுவம்.

எனக்கு ஒதுக்கப்பட்டுள்ள நேரம்: ஐம்பது மணித் துளிகள்.

நான் கொடுக்க விரும்புவது: இருபத்தி ஐந்து கருத்துக்கள்.

நோக்கம்: குறள் உலகில் சிறந்தது என விளக்க.

பலன் : ?

- கி. ஆ. பெ. விசுவநாதம்

✿ எல்லா இனத்தவரும் ஒன்றுசேர்ந்து காந்தி விழாவில் பங்கெடுத்துக் கொண்டது இந்தச் சந்தர்ப்பத்தில் தான். பதின்மூன்று மொழிகளில் குழந்தைகள் காந்திஜிக்கு அஞ்சலி செய்த காட்சி மறக்க முடியாத நிகழ்ச்சி.

- குமரிமலர் ஏ. கே. செட்டியார்

✿ சமீபத்தில் சென்னையில் நடந்து முடிந்த வள்ளுவர், வள்ளலார், காந்தி முப்பெரு விழாவில் காதிலே விழுந்த சொற்றொடர்கள் தாம் மேலே கண்டவை. விழா நடந்த ஒன்பது தினங்களிலும் ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் ரசிகப் பெருமக்கள் திரளாகக் கூடி அறுபதுக்கும் மேலான சொற்பொழிவாளர்களின் பேச்சைக் கேட்டு மகிழ்ந்தார்கள்.

இந்த விழாவுக்கு நான்முகப் பிரும்மா, வேல்மயில் முருகன், விநாயகப் பெருமான், வெண்ணையுண்ட கண்ணன், சூடிக் கொடுத்த ஆண்டாள், திருப்பதி வேங்கடாசலபதி, பாற் கடல் பரந்தாமன் எல்லோருமே விஜயம் செய்திருந்தார்கள். ஆம்! அற்புத வண்ணங்களில் தீட்டப்பட்டிருந்த இவர்களுடைய பிரும்மாண்ட ஓவியங்கள் மண்டபம் முழுதும் நிறைந்து நின்று தெய்விக மணத்தைப் பரப்பிக் கொண்டிருந்தன. பொள்ளாச்சியில் நடந்த தம் வீட்டுத் திருமணச் சூழ்நிலையை அப்படியே சென்னையில் நடந்த விழாவிலும் பிரதிபலிக்கச் செய்திருந்தார் ராமலிங்கர் பணிமன்றத் தலைவர் திரு நா. மகாலிங்கம். அவருக்கு உறுதுணையாக நின்றவர், மணலி திரு இலட்சுமண முதலியார். அறக்கட்டளையின் அறங்காவலர் திரு மணலி ராமகிருஷ்ண முதலியார்.

முப்பெரும் விழா ஒப்புயர்வற்ற விழாவாகத் திகழ்ந்ததில் வியப்புக்கு இடமில்லை.

- பட்டினத்தார்

விழாவில் நா. மகாலிங்கம், ராய. சொ., கிருபானந்தவாரியார் ஆகியோர் முப்பெரு ஞானிகளின் படங்கள் அலங்கரித்த மேடையில் அமர்ந்திருக்கின்றனர்.



# கால்கேட் மூலம், வாய்-நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

COLGATE DENTAL CREAM SUPER SIZE

COLGATE DENTAL CREAM SUPER SIZE

COLGATE DENTAL CREAM SUPER SIZE

5 வசதியான சைஸ்களில் கிடைக்கிறது!



ஏனெனில்:
ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம் வாய்நாற்றத்தையும் பற்சிதைவை விளைவிக்கும் கிருமிகளையும் 85 சதவிகிதம் வரை அகற்றுகிறது.

கால்கேட் 10 க்கு 7 பேர்களில் வாய்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும், உணவு உட்கொண்ட உடனேயே கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன! இந்த நிரூபணத்தைப் பெற்றிருப்பது கால்கேட் மட்டுமே!
அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி. கால்கேட் டென்டல்க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாது பல் துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே...மற்றெந்தப் பற்பசையையும்விட உலகிலே அதிக மக்கள் கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத்பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்!

DC.G.37 TM



# பொக்கிஷப் பந்து

குண்டுமணி

பாலுவின் குடும்பத்தில் தாத்தா காலத்திலிருந்தே ஒரு சிறு மரப் பெட்டி இருந்தது. அதை அவன் குடும்பத்தினர் பொக்கிஷமாகப் பாதுகாத்து வந்தனர். "அந்தப் பெட்டிக்குள் என்ன அப்பா இருக்கு?" என்று ஒரு நாள் ஆவலுடன் கேட்டான் பாலு.

"உன் தாத்தா கிரிக்கெட் ஆட்டத்தில் மிகவும் கெட்டிக்காரர். அந்தக் காலத்தில் முஷ்டாக் அலியை முதல் பந்திலேயே பூஜ்யம் எண்ணிக்கையில் 'அவுட்'டாக்கி யிருக்கிறார். அந்த ஆட்டத்தின் நினைவாக உன் தாத்தா அந்தப் பந்தைப் பத்திரமாக எடுத்து இந்தப் பெட்டியிலேபூட்டி வைத்திருக்கிறார்" என்றார் அவன் அப்பா.

"அப்படியா, அப்பா! நம்ம தாத்தா பெரிய கிரிக்கெட் ஆட்டக்காரரா?" என்று கேட்டு மகிழ்ந்தவன், அந்த மகிழ்ச்சியை நண்பர் குமாருடனும் பகிர்ந்து கொண்டான்.

"அந்தப் பந்தை எங்களுக்கும் காட்டேண்டா" என்று நண்பர்கள் நச்சரிக்கவே, ஒரு நாள் யாருக்கும் தெரியாமல் பாலு, அந்தப் பொக்கிஷப் பந்தை நடுத் தெரு மாட்சுக்கு ஆடவே எடுத்து வந்துவிட்டான்!

மாலை வீடு திரும்பும்போது பாலுவுக்கு ஒரு பேரதிர்ச்சி காத்திருந்தது. ஆம், அவன் பரம்பரைப் பொக்கிஷம் தொலைந்துவிட்டது!

"அம்மா! நம்ம பரம்பரைப் பொக்கிஷமான பந்து — முஷ்டாக் அலியைத் தாத்தா 'அவுட்' ஆக்கிய பந்து — நடுத் தெருவில் ஆடும்போது தொலைந்து போச்சு, அம்மா!" என்று அலறினான் பாலு.

"இதற்காகவா அழுகிறாய்? நம் வீட்டில் மற்றொரு பந்து இருக்கிறது! அதுதான் தாத்தா ஆடிய உண்மையான பந்து!" என்று சமாதானப்படுத்தினாள் தாயார்.

"டேய்! வருங்கால முஷ்டாக்! உங்க பரம்பரைப் பொக்கிஷம் தொலைஞ்சு போச்சாமே?" என்று நடுத்தெரு நண்பர் குமாம் பாலுவிடம் துக்கம் விசாரித்தது.

"தாத்தா ஆடிய பந்து பத்திரமாப் பெட்டியில் இருக்கு. எங்கம்மா பரம்பரைப் பொக்கிஷத்தை மறைத்து வைத்துவிட்டு நமக்கு ஆட வேறொரு பந்தைத்தான் கொடுத்தாளாம்" என்றான் பாலு!

"எங்கே அந்தப் பந்தைக் காட்டு, பார்க்கலாம்" என்று வக்கீலைப்போல் கேட்டான் அடுத்த வீட்டுப் பாச்சா.

"இதுதாண்டா!" என்று ஓடிப் போய்ப் பாலு அந்தப் பந்தைக் கொண்டு வந்தான்.

"டேய்! இது புதுப் பந்துன்னா? நேற்று உங்க அப்பாவும் எங்க அப்பாவும் கிரிக்கெட் கிளப்புக்கு விளையாடக் கடையிலே வாங்கின பந்து இது. நானும் கூடப் போயிருந்தேனே!" என்று குட்டை உடைத்தான் பாச்சா.

"அப்படின்னா எங்க தாத்தா முஷ்டாக் அலியை 'அவுட்'டாக்கின பந்து தொலைந்து போச்சா? அம்மா என்னைச் சமாதானப் படுத்த இப்படி ஒரு கதை கட்டி விட்டாளா?" என்று பெருமூச்செறிந்தான் பாலு.

"டேய்! அழுது ஒப்பாரி வைக்காதே. நான்தான் உங்க தாத்தாவின் பொக்கிஷப் பந்தை எடுத்துப் போய் எங்க தாத்தாவிடம் காண்பிச்சேன். 'டேய், இந்தப் பந்து உனக்கு எப்படிடா கிடைச்சது? முஷ்டாக் அலி அடிச்ச 'சிக்ஸர்'லே பக்கத்து வீட்டுத் தாத்தாவின் தலையைப் பதம் பார்த்த பந்துடா இது. பட்ட அடியில் பல நாட்கள் அவர் தலையில் கட்டுப் போட்டுண்டிருந்தாரடா! ஆனால் அவருக்குக் கிரிக்கெட் பந்திலே அடிபட்டதுன்னு சொல்லிக்கொள்ள வெட்கம்! அதனாலே ஆட்டம் முடிந்த அன்று கெஞ்சிக் கேட்டு அந்தப் பந்தை வாங்கிக் கொண்டார். கொஞ்ச நாட்கள் கழிந்து, காயம் ஆறியதும், முஷ்டாக் அலியை 'அவுட்' ஆக்கிய பந்து என்று கதை கட்டி விட்டுட்டாரடா' என்றார்." குட்டை உடைத்துப் பந்தைக் கொடுத்தான் பாச்சா. நடுத் தெரு நண்பர்களின் நகைப்பொலி காதைப் பிளந்தது.

அன்று தாத்தாவின் பீரோவைப் பாலு குடைந்து கொண்டிருந்தபோது அவர் எழுதி வைத்திருந்த டயரி கிடைத்தது.

"என் வாழ்க்கையில் இன்று பொன்னான நாள். முஷ்டாக் அலி அடித்த ஸிக்ஸர் பந்து அதிர்ஷ்ட வசமாக என் தலையைத் தாக்கியது. தலைக் கட்டுடன் மாட்ச் பார்க்க வந்த எனக்கு ஏக மதிப்பு. பணக்காரப் பெண் மங்களத்துக்கோ 'ஆட்டோகிராப்' பைத்தியம்! என் தலைக் கட்டுப் பெருமையினால் பல விதக் கட்டுப்பாடுகளையும் மீறி ஆட்டக் கலைஞர்களுக்கு மத்தியில் சென்று அத்தனை பேரிடமும் அவளுக்காகக் கையெழுத்து வாங்கிக் கொடுத்தேன். பலன் என்மீது அவளுக்கு ஈடுபாடு ஏற்பட்டு விட்டது. முஷ்டாக் அலியின் பந்து மட்டும் என்னைக் குறி பார்க்கவில்லையென்றால் அவள் என்மீது காதல் கொண்டு கல்யாணம் செய்து கொண்டிருப்பாளா? எனவே அந்தப் பந்தை ஞாபகார்த்தமாகச் சிரமப்பட்டு வாங்கிக் கொண்டு விட்டேன். அது எனக்குப் பொக்கிஷமாயிற்று."

தாத்தாவின் பொக்கிஷத்தைத் தெரிந்து கொண்ட பாலு பாட்டியின் பொக்கிஷத்தையும் தேடினான். அவன் தாத்தா காலத்தில் நடந்த டெஸ்டில் ஆடிய இங்கிலாந்துகோஷ்டி, இந்திய கோஷ்டியினரின் கையெழுத்துக்கள் அடங்கிய ஆட்டோகிராப் புத்தகம் பாட்டியின் பெட்டியிலிருந்து கிடைத்தது; பாலுவின் பெருமையையும் பன்மடங்கு உயர்த்தியது.



# எமனும் எஸ்.பி.பஞ்சநதமும்

முகுந்தன்

மயிலாப்பூர் சித்திரக்குளம் வட்டாரத்தில் போய், ''இங்கே எம். என்.....'' என்று ஆரம்பித்தால் போதும்; ''அதோ, அந்த வீடுதான்!....'' என்று எல்லோரும் பச்சை வர்ணம் அடித்த வீட்டைச் சுட்டிக்காட்டுவார்கள். முழுப் பெயரையும் சொல்லத் தேவையின்றி, பெயருக்கு முன்னால் இருக்கும் முதலெழுத்துக்களைச் சொன்னாலே அடையாளம் கண்டுகொள்கிற மாதிரி பிரபலமாகியிருந்தான் எம். என். சுந்தரம் என்கிற பயல்.

சுந்தரத்துக்கு இன்றைக்கெல்லாம் இருந்தால் வயது இருபத்தாறுதான் இருக்கும். ஆனால் உலக ஞானமோ அவனைப் போல் இரண்டு மடங்கு வயதானவர்களுக்கு இருப்பதைவிடச் சற்று அதிகமாகவே இருந்தது. அதற்குக் காரணம் அவன் பழகும் விதம் தான். எப்படிப்பட்ட முசுடுகளாகத்தான் இருக்கட்டுமே, நொடிப் பொழுதில் அவர்களைச் சிநேகம் பிடித்துக் கொண்டு விடுவான். அவனுடன் ஐந்து நிமிடங்கள் பேசினோமானால் நமக்கு இரண்டு ரூபாய்க்குச் செலவு வைப்பான் — அதாவது நம் செலவில் தன் டிபனை முடித்துக் கொள்வான். பதினைந்து நிமிடங்கள் பேசினோமானால் இருபத்தைந்து ரூபாய்க்கு வேட்டு வைப்பான் — கைமாற்று வாங்கிக் கொண்டு. அரை மணி நேரம் பேசி விட்டால் போயிற்று. ஆயுட் காலத்துக்கும் பிடித்தது அஷ்டமத்துச் சனியன் என்று தைரியமாக அடித்துச் சொல்லலாம்.

இப்படிப்பட்ட குண நலம் வாய்ந்த சுந்தரத்திடம் இன்னொரு விசேஷமும் அமைந்திருந்தது. அவன் எந்த இடத்திலும் எந்த வேலையிலும் — ஒரு வருடத்துக்கு மேல் நிலைத்தது கிடையாது. அது என்ன ராசியோ ஒரு வேலையிலிருந்து இன்னொன்றுக்குத் தாவிக் கொண்டேயிருந்தான் அவன். காகிதம் முதல் கம்ப்யூட்டர் வரையில், குண்டூசி முதல் ரோட் ரோலர் வரையில் எல்லா விற்பனை நிலையங்களிலும் அவன் வேலை பார்த்ததுண்டு. இதில் ஆச்சரியப்படத்தக்க இன்னொரு விஷயம் என்னவென்றால், ஒரு வேலையில் இருக்கும்போது, ''பூ! இதென்ன குப்பை!.... ஒரு நாள் உதறுகிறேன் பார், ஒட்டடை மாதிரி!....'' என்று பகிரங்கமாகச் சொல்வான். சொன்னபடியே உதறியும் காட்டுவான். அவனாகத்தான் இதுவரை எல்லாவற்றையும் உதறியிருக்கிறானே தவிர, அவனை யாரும் ரேழியில் தூக்கிப் போட்டதோ, தரையில் உருட்டி விட்டதோ, வீதியில் 'கடாசி' எறிந்ததோ கிடையாது. இந்தப் பெருமையில் அவனுக்குக் கொஞ்சம் தலை கிறுகிறுத்துப் போவதும் உண்டு.

மவுண்ட்ரோட்டிலே எட்டடுக்கு மாளிகையொன்றின் ஏழாவது மாடியிலே 'ரங் அண்ட் ஸாம்' என்கிற பெயரில் ஒரு கம்பெனி இரும்புக் குழாய் வியாபாரம் செய்து வந்தது. அந்தக் கம்பெனியிலே சுந்தரம் வேலைக்குப் போய்ச் சேர்ந்த கதையே சுவாரசியமானது. அப்போது நம் சுந்தரம் செம்புதாஸ் தெருவில் 'ரஸைதுல்லா பானர்ஜி அண்ட் பிரதர்ஸி'ல் வேலை பார்த்து வந்தான். 'ரங் அண்ட் ஸாம்' என்ன செய்தார்களென்றால் 'ரஸைதுல்லா பானர்ஜி'களிடம் பெருந்தொகைகளை இரும்புக் குழாய்களுக்கென முன்பணமாகப் பெற்றுக் கொண்டு விட்டு, குழாய்களைக் கண்ணில் காட்டாமல் நன்றாகத் 'தண்ணீர்' (புழுவெளி உபாயம் அல்ல!) காட்டி வந்தார்கள். 'குழாய்களை எப்போது விநியோகம் செய்வீர்கள்?...'' என்று கேட்டு ரஸைதுல்லாக்கள் கடிதத்துக்கு மேல் கடிதம் போட்டும் 'ரங் அண்ட் ஸாம்' லட்சியம் செய்யாமல் போகவே, காரியத்தைச் சாதித்துக்கொண்டு வருவதற்கென்று 'எமன்' என்று நண்பர்களால் உரிமையுடனும், விரோதிகளால் வயிற்றெரிச்சலுடனும் அழைக்கப்படுகிற, எம்.என். சுந்தரத்தை அனுப்பி வைத்தார்கள்.

'ரங் அண்ட் ஸாம்' கூட்டாளிகளான ரங்கநாதனும் சாம்பசிவமும் எட்டு ஊர்த் தண்

ணீர் குடித்தவர்கள். எனவே, இந்தப் பயலுக்குத் தண்ணீர் காட்டாவிட்டாலும் போக்குக் காட்டவா அவர்களுக்குத் தெரியாது....?

ஆனால் சுந்தரம் அலுக்கவில்லை; சலிக்கவில்லை. அவர்கள் குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட நேரத்தில் போய்க் குதித்தான் — ஒரு தவணைகூடத் தவறாமல்! 'என்ன, இவ்வளவு ஆட்டம் காட்டியும் இந்தப் பயல் அலுத்துப் போகவில்லையே!' என்று ரங் அண்ட் ஸாமுக்கு ஆச்சரியமான ஆச்சரியம்.

சுந்தரத்தின் தளரா உற்சாகத்தையும், அயரா உழைப்பையும் பார்த்த ரங்கசாமி ஒரு முடிவுக்கு வந்தார். அதன் விளைவாக, ரஸகுல்லா பானர்ஜிக்கு இரும்புக் குழாய்கள் கிடைக்காததோடு வேறொரு மகத்தான நஷ்டமும் ஏற்பட்டது.

'இப்படிப்பட்ட ஒரு விடாக்கண்டன் நம்மிடம் இருந்தால் தேவலையே!' என்ற எண்ணத்தின் பயனாக, சுந்தரத்தைக் கூப்பிட்டு, அவனைத் தாம் வேலைக்கு எடுத்துக் கொள்ள உத்தேசித்திருப்பதாக ரங்கசாமி கூறவும், அதுதான் சமயமென்று '(இரும்பு) சட்டி சுட்டதடா! கை விட்டதடா!' என்று ரஸகுல்லாவுக்கு முழுக்குப் போடத் தீர்மானித்து விட்டான் சுந்தரம்.

'எமன்' வேறு வேலைக்குப் போகப் போகிறான் என்ற செய்தி தெரிய வந்ததும், ரஸகுல்லா அலுவலகத்தில் அவனுடைய உயிர் நண்பனை முத்துசாமி தேடிக் கொண்டு வந்தான்.

''அங்கே விற்பனை மானேஜராக ஒருத்தன் இருக்கிறான். பஞ்சநதம் என்று பெயர்.... தெரியுமா உனக்கு...?'' என்று கேட்டான்.

''சுவாமி! அவரே என் வருங்காலத் தலைவர்!.... சீப்!....''

''ஓகோ....! அப்படியானால் உடன்பாடு இன்னும் தொல்லைதான்.... அந்த ஆசாமி ஓர் அரைக் கிறுக்கு....''

''ஆனாலும் அவரிடமும் சரக்கு இருக்கிறது என்று கேள்விப்பட்டேனே!....''

''இருந்தாலும் அது ஒரு மாதிரி டைப். ஸெமி. முன்னுக்குப்பின் முரணாக ஏதாவது சொல்லிக் கொண்டே இருப்பாராம். ஞாபகசக்தியும் ரொம்ப மோசம் என்று கேள்வி.''

'' அவ்வளவு தானே! விடு கவலையை....! நம்மிடம் ஒன்றும் அது வாலாட்ட முடியாது?.. ஐயாவா, கொக்கா? போனவுடனே அவருடைய வலது கண்ணிலே என் இடது சுண்டுவிரலை விட்டு ஆட்டுகிறேனா இல்லையா பார்!....'' என்று சவால் விட்டான் சுந்தரம்.



தான் தீர்மானித்தபடியே, 'ரங் அண்ட் ஸாம்'மில் போய் வேலைக்குச் சேர்ந்துவிட்டான் சுந்தரம். 'மேலே மேலே போய்க் கொண்டே யிருக்க வேண்டாமா?' என்று பழைய முதலாளி பானர்ஜியிடம் சொன்னதைப் பொய்யாக்காமல் இருப்பதற்காகவோ என்னவோ, தினமும் 'லிப்டி'ல் ஆறு மாடிகளைக் கடந்து மேலே மேலே போய் வந்தான்!

அவனுடைய நேர் மேலதிகாரியான பஞ்சநதத்தை (வயது 68) முதல் முறையாகச் சந்தித்த போதே, 'இந்தக் கிழம் நிச்சயம் ஓர் அரைக் கிறுக்குத்தான்' என்று அவன் உறுதிப்படுத்திக் கொள்ளும் வகையிலேயே அவர் நடந்து கொண்டார்.

ஒரே இடத்தில் உட்கார்ந்து வேலை செய்வதைக் காட்டிலும் வெளியிலே நாலு இடங்களுக்குப் போய்ப் பத்துப் பேரைப் பார்த்துக் காரியத்தை முடிப்பதுதான் சுந்தரத்துக்குப் பிடித்தமானதாகவும் கைவந்ததாகவும் இருந்தது. ரஸகுல்லாக்களிடம் இருந்த போது அவன் மேஜையடியில் உட்கார்ந்திருந்ததைக் காட்டிலும் ஊர் ஊராகச் சுற்றிய நாட்கள்தாம் அதிகம். ''ஒரே இடத்தில் உட்கார்ந்து நாற்காலியைத் தேய்த்துக் கொண்டிருந்தால் தொழுவத்தில் கட்டியிருக்கும் மாட்டுக்கும் நமக்கும் அப்புறம் என்ன வித்தியாசம்?.... ஓடியாடி வேலை செய்வதில்தான் இருக்கிறது ஒருத்தன் சாமர்த்தியமெல்லாம்'' என்று அடிக்கடி சொல்வான் சுந்தரம்.

'ரங் அண்ட் ஸாம்'மிலும் இப்படி வெளியே சுற்றுவதற்கு நிறையச் சந்தர்ப்பங்கள் கிடைக்கும் என்றுதான் ஆரம்பத்தில் நம்பினான் சுந்தரம். ஆனால் அவனுடைய நம்பிக்கையில் பஞ்சநதம் பத்து லிட்டர் சமுத்திர மணலை அள்ளிப் போட்டார். 'பிஸினஸ்- டூர் போகிறேன்' என்று ஒன்றுவிட்டு ஒரு நாள் அவர்தான் கிளம்பிக் கொண்டிருந்தாரே தவிர, சுந்தரத்தைத் தண்டையார்பேட்டை வரைக்கும்கூடப் போக விடவில்லை.

ஜெய்ப்பூர், ஜோத்பூர், கான்பூர் என்று எல்லாப் பூர்களையும் ஒரு பார்வை பார்த்துக் கொண்டு, ஆபீசுக்கு ஆயிரத்து இருநூறு ரூபாய் தண்டச் செலவு வைத்து விட்டு, ஜோத்பூரிலிருந்து பெண்ணுக்குப் 'பிளிஸிரி' பித்தளை வைமால்களும், கான்பூரிலிருந்து பேரனுக்குச் செருப்புகளும் வாங்கிக் கொண்டு வந்து குதித்தார் பஞ்சநதம். 'பிடித்து'வந்த பிஸினஸ்: 0.00 ரூபாய்!

''இந்தா! இந்தக் கணக்கெல்லாம் சரியாக இருக்கிறதா பார்!'

என்று ஒரு கற்றைக் காகிதத்தைச் சுந்தரத்திடம் தூக்கிப் போட்டார். வேண்டா வெறுப்புடன் அந்தக் கணக்கைக் கூட்டிப் பார்த்தான் சுந்தரம். பஞ்சநதம் ஓர் இடத்தில் இருநூறு ரூபாயை அதிகமாகச் சேர்த்துக் கூட்டியிருந்தார். சட்டென்று அதைத் திருத்துவதற்குப் போன கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு, 'அப்புறம் ஆடிட்டர் பார்க்கும்போது ஆசாமி மாட்டிக் கொண்டு தவிக்கட்டும்!' என்கிற நல்லெண்ணத்தில் சும்மா இருந்து விட்டான். ''நீங்கள் கணக்குக் கொடுத்தால் அதிலே தப்புக்கூட வருமா சார்?'' என்று வேறு கிழவருக்கு ஐஸ் வைத்தான்.

நாளாக நாளாக அவனுக்குப் பஞ்சநதத்தைக் கண்டாலே கசந்தது. அவருடன் பேசினாலே உடம்பெல்லாம் பற்றிக்கொண்டு வந்தது. எதற்கெடுத்தாலும் விதண்டாவாதம் செய்வதும் முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதும், கிறுக்குத்தனமாக உளறுவதும் அவர்மீது அவன் கொண்டிருந்த வெறுப்பை விசிறிவிட்டு அதிகப்படுத்தவே செய்தது. எனவே, சந்தர்ப்பம் வாய்த்த போதெல்லாம் பஞ்சநதத்தைக் கேலி செய்வதும், அவரைக் கவிழ்த்து விடுவதுமான காரியங்களில் தீவிரமாக முனைந்தான் சுந்தரம்.

யாருக்காவது இரும்புக் குழாய் விற்பது சம்பந்தமாகக் கடிதம் எழுதும்போது, ''அந்த அழுமூஞ்சிக் கார்ப்பரேஷனுக்கு நாம் என்ன விலை சொன்னோம் பார்: பதினாறு ரூபாயா, இருபத்தாறு ரூபாயா?'' என்று பஞ்சநதம் ஏதாவது சந்தேகம் கேட்டாரானால், எதையும் புரட்டிப் பார்க்காமலே ''பார்த்து விட்டேன், சார். பதினாறு ரூபாய்தான்!'' என்று தைரியமாகப் புளுகுவான் சுந்தரம்.

இது மட்டுமா? ஒரு முக்கியமான பைலை எடுத்து ஒளித்து வைத்துப் பத்து நாட்கள் வரை ஆட்டம் காட்டினான்; நான்கைந்து டெண்டர்களில் வேண்டுமென்றே விலையை உயர்த்திப் போட்டு அனுப்பினான். பஞ்சநதம்தான் கடிதங்கள் 'டைப்' ஆன பிறகு படித்துப் பார்க்காமலே கையெழுத்துப் போடுபவராயிற்றே! எனவே அவரும் போட்டார். டெண்டர்களும் போட்டன அந்தர் பல்டி! ஆபீசுக்கு லட்சம் ரூபாய் பிஸினஸ் 'அம்பேல்' ஆகிவிட்டது!

ஓரிரு சமயங்களில் இந்தச் சிறுபிள்ளைத்தனமான விளையாட்டுக்களில் வெறுப்புத் தட்டியது சுந்தரத்துக்கு. அவன் என்ன செய்து என்ன? பஞ்சநதத்தை அசைக்க முடியவில்லையே? அரால்டைட் போட்டு ஒட்டிய மாதிரியல்லவா ஆசாமி நாற்காலியைப் பிடித்துக் கொண்டிருந்தார். அவரால் கம்பெனிக்கு என்னதான் செலவும் எவ்வளவுதான் நஷ்டமும் ஏற்பட்டாலும் அவரை ரங்கசாமியோ அல்லது சாம்பசிவமோ அடித்துத் துரத்துவதாகக் காணோம். ''அவர் இங்கே இருக்கிறதினாலே கம்பெனிக்குத்தான் பெருமை; அவருக்கில்லை... ஹெ ஹெ!...'' என்று ரங்கசாமி புகழ் மாலை சூட்டினதும், ''எக்ஸாக்ட்லி!'' என்று வழுக்கை மண்டையை உருட்டி உருட்டிச் சாம்பசிவம் அதை ஆமோதிப்பதும் சுந்தரத்துக்கு எரிச்சலூட்டின.

வெளியே விருப்பப்படி சுற்ற முடியாது: முதுகெலும்பை முறித்துப் போடுகிற மாதிரி வேலை; அரைக் கிறுக்கு மேலதிகாரி; அசட்டு முதலாளிகள் — இந்தச் சூழலில் காலத்தை ஓட்ட அவனுக்குப் பிடிக்கவில்லை. 'சரி, நமக்கு இந்த இடம் சரிப்பட்டு வராது. வேறு இடம் பார்க்க வேண்டியதுதான்... ஆனால் இதை உதறிவிட்டுப் போவதற்கு முன் பஞ்சநதக் கிழத்தின் முகத்தில் வீக்கோலை அரைத்துப் பூசிவிட்டு, ஓசைப்படாமல் போய்விட வேண்டும்' என்று முடிவு செய்து கொண்டான் சுந்தரம். அதற்கேற்ற தருணமும் சீக்கிரமே வந்து சேர்ந்தது.

''அடுத்த மாதம் முதல் தேதியிலிருந்து நம்முடைய விலைகளையெல்லாம் உயர்த்தப் போகிறோமே, அதைக் குறித்து நம்முடைய வாடிக்கைக்காரர்களுக்கெல்லாம் ஒரு சுற்றறிக்கை போட வேண்டியது அவசியமல்லவா?'' என்று ஒரு நாள் மெள்ளப் பஞ்சநதத்திடம் கேட்டான் சுந்தரம்.

''அவசியம்தான் ஐயா, அவசியம்தான். முன்னே பின்னே அறிவிக்காமல் விலையை உயர்த்தினால் அவனவன் கூச்சல் போட மாட்டானா? சர்க்குலர் போட்டுத்தான் ஆக வேண்டும். நீராகப் புத்திசாலித்தனமா ஒன்று எழுதிக் கொண்டு வருவீரா, அதை விட்டு இப்படி மடத்தனமாகக் கேள்வி கேட்டு நேரத்தை வீணாக்கிக் கொண்டிருப்பீரா? இதெல்லாம் நான் சொல்லிக் கொடுக்க வேண்டுமாக்கும்?'' என்று கடுகடுத்தது அந்தக் கிறுக்கு.

சோடாப் புட்டியை உடைத்து விரலால் மூடிக் கொண்டாலும் உள்ளுக்குள் பொங்கி நுரைப்பதுபோல் அவனுக்குள் ஆத்திரமும் கோபமும் பொங்கிக் கொண்டு வந்தன. அவரை எப்படிப் பழி தீர்த்துக் கொள்வது என்று ஏங்கிக் கிடந்தவனுக்குப் பளிச்சென்று ஒரு வழியும் புலப்பட்டது. உடனே, சுற்றறிக்கை தயாரிப்பதில் மும்முரமாக முனைந்தான். டைப் பண்ணிப் பிரதிகள் எடுத்து, அன்று சாயந்திரத்துக்குள்ளேயே பிரதிகளில் பஞ்சநதத்தின் கண்மூடித்தனமான கையெழுத்தையும் வாங்கினான். வாங்கிய பிறகே அவன் மனம் நிம்மதி யடைந்தது.

ஐம்பது கடிதங்களையும் எடுத்துக் கொண்டு தபாலில் சேர்க்கும் நோக்கத்துடன் சுந்தரம் புறப்பட்டபோது, அபசகுனம்போல் பஞ்சநதம் எதிரே வந்தார்.

''எங்கே அதற்குள் கிளம்பி விட்டாய்? வீட்டுக்கா?'' என்று கேட்டார்.

''இல்லை சார்... தபாலாபீசுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். அந்தச் சுற்றறிக்கை இன்றைக்கே போக வேண்டுமென்றீர்களே?''

''நல்ல வேளை, ஞாபகப்படுத்தினாயே! ரங்கசாமியிடம் அதைப் படித்துக் காட்ட வேண்டாமோ?... வா, என்னோடு!...''

''வேண்டாம், சார்... முதலில் இதைப் போஸ்ட் செய்து விட்டு வந்து விடுகிறேன். நேரமானால் அப்புறம் கட்டு எடுத்துவிடுவான்'' என்று நழுவப் பார்த்தான் சுந்தரம்.

''அதெல்லாம் ஒன்றும் கவலைப்படாதே... பி. எம். ஜி. ரங்கபாஷ்யம் என்கிட்டே வேலை பார்த்தவன். நான் சொல்கிறேன், அவனிடம். ஒரே ஒரு நிமிஷம் நீ உள்ளே வந்து




# எல்லா பண்டங்களையும் சுதாவில் தயார் செய்து உயர் ரக உணவை அடைய முயலுங்கள்

உங்கள் உணவுக்கு சுதா தனிப்பட்ட மண, ருசியையும் கொடுத்து உங்களுக்கு மேலும் போஷாக்கையும் அளிக்கிறது. சுதா உணவையும் விருந்துபோல் செய்கிறது.

அலுத்துப்போன உணவை உண்டு திருப்தி அடைவதைக் காட்டிலும் பண்டங்களை சுதாவில் தயாரித்து விருந்தைப்போல் சாப்பிடுங்கள்.

உங்கள் சமையலுக்கு சுதா இன்றியமையாத ஒரு சாதனம்.

## சுதா வனஸ்பதி

கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிடெட்
ஹைட்ரோஜனேஷன் டிவிஷன்
கோழிக்கோடு - 5 கேரளா




KSO: 49

விட்டுப் போ!'' என்றவர், அவன் கையைப் பிடித்துத் 'தரதர' வென்று ரங்கசாமியின் அறைக்கே இழுத்துக் கொண்டு போய் விட்டார்.

''என்ன, இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் வந்திருக்கிறீர்களே, என்ன விசேஷம்?'' என்று பஞ்சநதத்திடம் கேட்டார் ரங்கசாமி.

''விசேஷம் இல்லாமல் இவரை அழைத்துக் கொண்டு வருவேனா? சர்க்குலர் ஒன்று போட்டிருக்கிறோம். சுந்தரம்தான் அதைத் தயார் செய்திருக்கிறார். 'படித்துக் காட்டி விட்டுப் போ' என்று அழைத்து வந்தேன்.''



உள்ளுக்குள் உதறல் இருந்தாலும் அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல் விலை மாற்றத்தைப் படித்து முடித்தான் சுந்தரம்.

''அவ்வளவுதானே?'' என்றார் ரங்கசாமி.

''அவ்வளவு... 'தான்''' என்று அவன் முடிப்பதற்குள் பஞ்சநதம் குறுக்கே பாய்ந்தார். ''கடைசிப் பாராவை விட்டு விட்டாயே சுந்தரம்?... நான் வேண்டுமானாலும் உனக்குப் பதிலாகப் படித்துக் காட்டட்டுமா சாருக்கு?...''

சுந்தரத்தின் முகம் சட்டென்று வெளிறிப் போயிற்று. பதில் ஏதும் சொல்ல வராமல் அவன் நாக் குழறியது.

''படிக்கக் கூட வேண்டாம்; நானே விஷயத்தைச் சொல்லி விடுகிறேனே!'' என்ற பஞ்சநதம் ரங்கசாமியின் பக்கம் திரும்பினார். ''நன்றாகக் கேட்டுக் கொள்ளுங்கள் சார், அந்தக் கடைசிப் பாராவை: 'வருகிற ஏப்ரல் 1ம் தேதி முதல் 'எஸ். பி. பஞ்சநதம்' என்கிற என் பெயரை 'சுத்த பித்துக்குளி பஞ்சநதம்' என்று மாற்றி வைத்துக் கொண்டிருக்கிறேன் என்பதை அறியவும்!'... இதுதான் சார் அந்தப் பாராவில் உள்ள விஷயம்!''

''வாட்! வாட்!... வாட் நான்சென்ஸ்!'' என்று படபடத்துக் கொண்டே துள்ளியெழுந்தார் ரங்கசாமி.

''நான் கவனிக்கவில்லை என்று சுந்தரம் நினைத்துக் கொண்டிருக்கிறார். அவருக்குத் தெரியாது. நான் ஆரம்ப முதலே அவரைக் கண்காணித்துக் கொண்டிருக்கிறேன் என்று. அதனால்தான் அவரைக் கையும் களவுமாக உங்கள் முன்னால் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறேன். பார்த்துக் கொள்ளுங்கள் இவருடைய யோக்கியதையை!'' என்ற பஞ்சநதம், அவர் சந்தேகம் கேட்டபோதெல்லாம் அவன் விலையை மாற்றிச் சொன்னது, பைலை ஒளித்து வைத்துவிட்டுப் போக்குக் காட்டியது, பிரயாணச் செலவுக் கணக்கில் தப்பு இருந்ததைக் கண்டுகொள்ளாமல் விட்டது டெண்டர்களில் விலை அதிகம் போட்டுக் 'கோவிந்தா' வாக்கியது, இன்னேரன்ன சுந்தரத்தின் பிற பிற திருவிளையாடல்களை மாதம், தேதி, நேரக் கணக்குப் பிசகாமல் 'பட் பட்'டென்று தோரண வெடி போல் வெடித்துத் தீர்த்தார்.

அவர் சொல்லி முடித்தபோது ரங்கசாமி நரசிம்மசாமியாக உருமாறியிருந்தார். ''யூ! யூ! யூ!... என்ன தைரியம் இருந்தால் என் சம்பந்தியை இப்படி யெல்லாம் நீ அவமானப்படுத்துவாய்? கெட் அவுட்!... ஐ ஸே கெட் அவுட்! யூ ராட்டன் பொட்டாடோ!'' என்று அவர் கர்ஜித்ததுதான் தாமதம், அறைக் கதவைத் திறந்து கொண்டு ஒரு பாய்ச்சலாக வந்த சுந்தரம், 'லிப்ட்'டுக்கும் கூடக் காத்திராமல், இருநூற்றுப் பத்துப் படிகளையும் இருபதே செகண்டுகளில் கடந்து கீழே வந்து சேர்ந்தான்!

''ஏண்டா பாவி! அந்தக் கிழட்டுப் பயலுக்கு ஏதோ ஞாபகசக்தி மோசம் என்று சொன்னாயேடா!... அவன் என்னடாவென்றால் எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர் கணக்காய்ப் பட்டுப் பட்டென்று எல்லாவற்றையும் புள்ளி விவரங்களோடு ஞாபகம் வைத்துக்கொண்டு தருகிறானேடா'' என்று மறுநாளே முத்துசாமியைச் சந்தித்தபோது நடந்ததைக் கூறி வயிற்றெரிச்சல் தீரக் கேட்டான் சுந்தரம்.

''என்ன உளறுகிறாய்? நான்தான் அன்றைக்கே எச்சரித்தேனே? மறந்து போய் விட்டாயா?'' என்று கேட்டான் முத்துசாமி.

''என்ன சொன்னாய் நீ? பஞ்சநதப் பாவிக்கு ஞாபகசக்தி மோசம் என்று சொன்னாயே?''

''ஆமாம், சொன்னேன்...''

''அவன்தான் எல்லாவற்றையும் நன்றாக ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறானேடா!''

''அட மடையா! நான் சொன்னதை, நீதாண்டா சரியாகப் புரிந்து கொள்ளவில்லை... அவனுக்கு ஞாபகமறதி அதிகம் என்றா சொன்னேன் நான்? ஞாபகசக்தி மோசம் என்றுதானே சொன்னேன்? அதற்கு அர்த்தம் என்ன? ஆசாமி கண்டதையெல்லாம் ஞாபகம் வைத்துக் கொண்டு உயிரை வாங்குவான் என்பதாக்கும்! நீதான் இதைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் அவனோடு போய் மோதி மூக்கை உடைத்துக்கொண்டு வந்து நிற்கிறாய்! யூ ஆர் எ ஸிம்பிள் பன், ஐ ஸே!'' என்று முத்துசாமி விளக்கினானோ இல்லையோ, சுந்தரம் மூர்ச்சை போட்டு விழுந்தவன், நான்கு நாட்களுக்குப் பின் நர்ஸிங் ஹோமில்'தான் கண் விழித்தான்!

# பூங்கா நகரம்—
# 60 ஆண்டுகள் முன்பே திட்டமிட்டு உருவானது

ஜாம்ஷெட்பூர்: வண்ணமலர்ச்சோலைகள் மிகுந்தது. எஃகு நகரமென அழைக்கப்படும் ஜாம்ஷெட்பூர். அது உண்மை! இந்தியாவின் எழில் மிகு நகரங்களில் அதுவும் ஒன்று. மேலைநாட்டில் திட்டமிட்ட நகரநிர்மாணங்கள் சர்வசாதாரணம். ஆயினும், அதனினும் அறுபது ஆண்டுகளுக்கு முன்பே ஜாம்ஷெட்பூர் திட்டமிட்டு உருவானதென்பது வியப்பேயாகும்.





ஜூபிலி பூங்கா: "மனிதர்களுக்கும், அவர்தம் உணர்ச்சிகளுக்குமான அடிப்படைத்தேவையை, எஃகு மற்றும் இரும்பைக்காட்டிலும், மலர்களும் பூங்காக்களும், மரங்களும் பூர்த்தி செய்கின்றன என்று நான் கருதுகிறேன். அந்த சிறந்த சிந்தனையின் தோற்றமே இப்பூங்கா."

—ஜவாஹர்லால் நேரு



சோனாரி— திருத்தியமைக்கப்பட்ட குடியிருப்பு. பல கட்டங்களில் திட்டமிட்டு, 20 குப்பங்களை, நல்ல வெளிச்சமுள்ள சாலைகள், போதுமான நன்னீர் வசதிகளுடன் சிறந்த குடியிருப்புகளாக மாற்றியமைக்க டாடா ஸ்டீல் உதவி செய்துள்ளது.



டாடா பெரிய மருத்துவ மனை: வசதிகளுடன் 600 படுக்கைகள் பெற்றது இந்த மருத்துவமனை. தவிர 82 படுக்கைகளுடன் ஒரு காசநோய் மருத்துவ மனையும் அதில் ஒரு குழந்தைகள் வார்டும் அமைக்க டாடா ஸ்டீல் உதவியுள்ளது.

எஃகும், மக்களுமே எங்கள் பலம்

**டாடா ஸ்டீல்**

TN-46

# ஓவியம்

எஸ். கிருஷ்ணமூர்த்தி



ஞாயிற்றுக்கிழமை. மாலை நேரம். எல்லோரையும் போல் வெளியே போய்ப் பொழுதுபோக்க என் பையில் பணமுமில்லை. உள்ளத்தில் உற்சாகமுமில்லை. நீண்டு வளர்ந்திருந்த பொழுதோ 'போவேனு' என்றது. போக விரும்பாத பொழுதைப் பிடரியைப் பிடித்துத் தள்ளுவதற்காக வாசலில் வந்து உட்கார்ந்தேன்.

அப்பொழுது என் வீட்டு வாசலில் ஒரு பெரிய கார் வந்து நின்றது. அதிலிருந்து இறங்கியவர் நாராயண் பாபு.

''ஓய்வாகத்தானே இருக்கிறீர்கள்? அப்படியானல் என்னேடு கிளம்புங்கள்!'' என்றார்.

'' எங்கே ?''

'' எங்கள் முற்போக்கு ஓவியர் சங்கத்தின் புதிய கட்டடத்துக்கு. அந்தக் கட்டடத்தின் திறப்புவிழா அடுத்த வாரம் நடக்கவிருக்கிறது. அதே சமயத்தில் எங்கள் சங்க ஓவியர்களின் படைப்புக்களைக் கொண்ட ஒரு நிரந்தரக் கண்காட்சியும் திறந்து வைக்கப்படும். இப்போதே ஓவியங்களை வைத்து விட்டோம். வந்து பாருங்கள்!''

கார் ஒரு பிரும்மாண்டமான புதிய மூன்றடுக்குக் கட்டடத்துக்கு முன் வந்து நின்றது. உள்ளே நுழைந்தோம். இதமாகக் குளுகுளுவென்று காற்று வீசியது.

''கட்டடம் முழுதும் 'ஏர் கண்டிஷ'னு?'' என்றேன்.

''ஆமாம்!'' உற்சாகத்துடன் பதிலளித்தார் நாராயண் பாபு. ''கட்டடத்தின் மேல் தட்டில் கலை நிகழ்ச்சிகளை நடத்துவதற்கேற்ற விசாலமான அரங்கு அமைத்திருக்கிறேம். முதல் மாடியில் ஓவியங்களின் நிரந்தரக் கண்காட்சி. இரண்டாம் மாடியில் நான்கு ஸ்டுடியோக்கள் எல்லா வசதிகளுடனும் அமைத்திருக்கிறேம். நான்கு ஓவியர்கள் ஒரே சமயத்தில் வெய்யில், புழுக்கம், குளிர் இவற்றால் துன்புருமல் அமைதியான சூழ்நிலையில் ஓவியம் தீட்டலாம்'' என்றெல்லாம் பேசிக் கொண்டே கட்டடத்தின் பல்வேறு பாகங்களை எனக்குக் காட்டத் தொடங்கினர்.

முதல் மாடிக்குப் போனேம். ஹாலுக்குள் நுழைந்ததும் என் கவனத்தைக் கவர்ந்தது அங்கே நடுநாயகமாக வைக்கப்பட்டிருந்த ஒரு பெரிய ஓவியம். விலை உயர்ந்ததும் கலை வேலைப்பாடுகள் நிறைந்ததுமான ஓர் அழகிய சட்டத்தில் பொருத்தப்பட்டிருந்த அந்தப் பிரும்மாண்டமான ஓவியத்துக்குப் பிரத்தியேக ஒளி அமைப்பு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வைத்த கண் வாங்காமல் அந்த ஓவியத்தைப் பார்த்தவாறே மெய்ம்மறந்து நின்று விட்டேன் நான்.

பகைப்புலத்தில் வரிசை வரிசையாகப் பல மாடிக் கட்டடங்கள் — நெருப்புப் பெட்டிகளை ஒன்றன்மேல் ஒன்ருக அடுக்கி வைத்தாற் போல.

ஓவியத்தின் முன் பகுதியில், பிரும்மாண்டமான பல மாடிக் கட்டடங்களுக்கும் அதைவிடப் பிரும்மாண்டமான ஹௌரா பாலத்துக்கும் திருஷ்டி பரிகாரமாக அமைந்த ஒரு குடிசை. தகரம், சாக்குத் துணி, கெட்டியான அட்டை ஆகியவற்றின் கதம்பமாக அமைந்த அந்த அமைப்புக்குக் 'குடிசை' என்று பெயர் கொடுப்பது சரியில்லைதான். 'குடிசை' என்ற சொல்லுக்கு உயிர் இருந்தால்

அது தன் கௌரவத்தைக் குலைத்துவிட்டதாகச் சண்டைக்கு வரும்.

அந்தக் குடிசைக்கு வெளியே ஒரு நிறைமாதக் கர்ப்பிணி புகைந்து கொண்டிருக்கும் கரியடுப்பின் முன்னால் உட்கார்ந்து கொண்டு அதை ஊதிக் கொண்டிருந்தாள். அவளுடைய பார்வை தெருக்கோடியை நோக்கி யிருந்தது. யாரையோ எதிர்பார்க்கும் பாவம் அந்தப் பார்வையில் தெளிவாகத் தெரிந்தது. அன்றாடக் கூலி பெற்றுச் சமையலுக்கான சாமான்களை வாங்கி வரும் புருஷனுக்காகக் காத்திருந்தாள் போலும்! இடையில் மட்டும் ஒரு சிறிய துணியை அணிந்த ஓர் ஒன்பது வயதுப் பெண் சற்றுத் தூரத்திலிருந்த குழாய்க் கிணற்றின் கைப் பிடியை அடித்து ஒரு பாத்திரத்தில் தண்ணீர் நிரப்ப முயன்று கொண்டிருந்தாள். இன்னொரு ஏழு வயதுப் பெண் அழுது கொண்டிருந்த தன் மூன்று வயதுத் தம்பியைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள். கர்ப்பிணித் தாயாரின் முகத்திலும் குழந்தைகளின் முகங்களிலும் பசியின் வேதனை தெளிவாகத் தெரிந்தது. கூடவே அந்தப் பெண்மணியின் தோற்றத்தில் ஓர் அசாதாரணமான பொறுமையையும், என்ன கஷ்டம் வந்தாலும் அதைச் சமாளிக்கத் துணிவையும் உறுதியையும் உருக்கம் ததும்பச் சித்திரித்திருந்தார் ஓவியர்.

அந்த ஓவியம் என்னை மெய்ம்மறக்கச் செய்து விட்டதைக் கவனித்த நாராயண பாபு உற்சாகத்துடன், "ஓவியம் எப்படி இருக்கிறது, ரஞ்சித் பாபு? இது எங்கள் இளம் ஓவியர் கதிர்சென்னின் படைப்பு. இங்குள்ள ஓவியங்களிலேயே மிகச் சிறந்தது இதுதான். இதற்குத்தான் இந்த ஆண்டு அகில இந்திய ஓவியப் போட்டியில் முதல் பரிசு கிடைக்கப் போகிறது, பாருங்கள்! அகில உலகப் போட்டிகளிலும் இந்த ஓவியம் பங்கு கொள்ளப் போகிறது!" என்று பேசிக் கொண்டே போனார்.

ஓவியங்களை யெல்லாம் எனக்குக் காண்பித்த பிறகு அவர் என்னைத் தம் ஆபீஸ் அறைக்கு அழைத்துச் சென்றார். அப்பொழுது அவருக்கு டெலிபோனில் ஒரு செய்தி கிடைத்தது. வசந்தபுரி மகாராணி ஒரு வெளிநாட்டவரைச் சற்று நேரத்தில் அங்கு அழைத்து வரப் போவதாயும், அது வரை அவரை அங்கே காத்திருக்கும்படியும் அந்தச் செய்தி சொல்லியது.

மணி அப்போதே ஒன்பது அடித்துவிட்டபடியால் அங்கே மேலும் தாமதிக்க எனக்கு விருப்பமில்லை. நான் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டேன். மாடியிலிருந்து இறங்கி ரஸ்தாவுக்கு வந்து சேர்ந்த பிறகுதான் எனக்கு ஞாபகம் வந்தது. நாராயண் பாபுவுடன் புறப்படும் அவசரத்தில் வீட்டிலிருந்து வரும் போது காசு எடுத்துக் கொள்ள மறந்து விட்டேன் என்ற விஷயம். பஸ்ஸில் போகக்கூடப் பையில் காசில்லை. வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினேன் நான்.

என் மனம் நான் சற்று முன்னால் பார்த்த ஓவியத்தின் நினைவிலேயே லயித்திருந்தது. நாட்டில் ஒரு சிலரிடம் ஏராளமான செல்வம் தேங்கிக் கிடப்பதும் பெரும்பாலோர் வறுமையில் உழல்வதும் எனக்குத் தெரியாததல்ல. செல்வத்தின் படாடோபத்தையும் அதற்கு நேர்மாறான ஏழ்மையின் அவலத்தையும் நாம் நாள்தோறும் பல தடவைகள் பார்த்துக் கொண்டுதானிருக்கிறோம். ஆனால் இந்தக் காட்சிகள் உள்ளத்தில் அவ்வளவாகச் சலனமுண்டாக்குவதில்லை.

ஆனால் அதே ஓவியம் ஓர் அழகான மாளிகையில், ஆடம்பர அலங்காரங்களுடன் ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட அரங்கத்தில் ஜோராக வீற்றிருப்பதைக் காணும் பொழுது....! அந்த ஓவியத்துக்குக் கிடைக்கும் உபசாரத்தில் நூற்றில் ஒரு பங்குகூட அதற்குக் காரணமான ஏழைக் குடும்பத்துக்குக் கிடைக்குமா? நிஜ வாழ்வில் இத்தகைய காட்சிகளைக் கண்டு மனங் கலங்காத கலாரசிகர்கள் அந்த ஓவியக் காட்சிக்காகப் பரிதாபப்பட்டுத் தங்கள் ரசனைத் திறத்தையும், இரக்க உணர்ச்சியையும் வெளிப்படுத்திக் கொள்ளுவார்கள். என்ன பைத்தியக்காரத்தனம் இது!

ஏதேதோ சிந்தனைகளில் ஈடுபட்டுச் சூழ்நிலையையே மறந்தவனாக வெகுதூரம் வந்த பிறகுதான் நான் சற்று நின்று என்னைச் சுற்றிக் கவனித்தேன். கவனித்த நான் திகைத்துப்போய்அப்படியே நின்றுவிட்டேன்.

நான் சற்று முன் பார்த்த ஓவியக் காட்சியா என் கண் முன் நிற்கிறது?

ஆம், அதுவேதான்! அதே நடைபாதை! பெரிய பெரிய மாடிக் கட்டடங்களின் காலடியில் அதே — 'குடிசை' என்ற பெயருக்குத் தகுதியில்லாத — குடிசை! அதே குழாய்க் கிணறு, அதே குழந்தைகள், அதே கரியடுப்பு, அதே.... இல்லையில்லை, ஒரே ஒரு மாறுதல். கரியடுப்புக்கு முன்னால் கர்ப்பிணி ஸ்திரீக்குப் பதிலாக உட்கார்ந்திருந்தான் ஓர் ஆண் பிள்ளை. அடுப்பின் மேல் பாத்திரத்தில் ஏதோ கொதித்துக் கொண்டிருந்தது. இந்தக் காட்சியைத்தான் ஓவியன் அந்த ஓவியத்தில் வடித்திருந்தான்.

அந்தக் காட்சியை நன்றாகப் பார்க்கும் எண்ணத்துடன் நான் அருகில் சென்றேன். அப்போது அடுப்புக்கு முன்னால் உட்கார்ந்திருந்த ஆள் திரும்பிப் பார்த்தான்.

"சம்பு!" என்று நான் ஆச்சரியத்துடன் கூவினேன்.

என்னைக் கண்டு திகைத்தான் சம்பு; பிறகு தன்னை ஒரு வழியாகச் சமாளித்துக் கொண்டு என்னை வரவேற்க முன்வந்தான்.

"என்ன ரஞ்சித்தா? ஏது இவ்வளவு தூரம்? வா, வா! என் மாளிகைக்கு உன் வரவு நல்வரவாகுக!" அவன் பக்கத்திலிருந்த குடிசையைக் காண்பித்தான்.

எனக்குக் கண்களில் நீர் வந்து விட்டது. சம்பு இந்தக் குடிசையிலா குடியிருக்கிறான்! இந்த நிலையிலா வாழ்க்கை நடத்துகிறான்!

அவன் வறிய நிலையில் இருக்கிறானென்பது எனக்குத் தெரியுந்தான். ஆனால் நிலை இவ்வளவு மோசமாக இருக்கும் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை.

எனக்கு ஏற்பட்ட அதிர்ச்சி என் முகத் தோற்றத்தில் தெளிவாக வெளிப்பட்டிருக்க

வேண்டும். ஆனால் அவன் அதைக் கவனித்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை. அவன் குழாயில் நீர் எடுத்துக் கொண்டிருந்த தன் பெரிய பெண்ணைக் கூப்பிட்டு, ''ராதா! உள்ளே போய் ஒரு பாய் எடுத்துக்கொண்டு வா '' என்றான்.

பாய் வந்ததும் நடைபாதையிலேயே அதை விரித்துக் கொண்டு உட்கார்ந்தோம்: ''ரஞ்சித்! நீ என் வீட்டுக்கு வந்து விட்டதால், என் நிலையில்தான் நான் உன்னை உபசரிக்க முடியும். உன்னை வீட்டுக்குள் அழைத்துப் போகாமல் இருப்பதற்காக என்னை மன்னித்து விடு. வீட்டுக்காரி பிரசவித்திருக்கிறாள். இன்று ஏழாம் நாள். உடம்பு சரியில்லை அவளுக்கு. உள்ளே படுத்திருக்கிறாள்; எனவே, வீட்டுக்குள் நாம் உட்கார இடமில்லை'' என்றான் சம்பு.

சம்புவும் நானும் நெடுங்கால நண்பர்கள். எங்கள் பூர்வீகம் கிழக்கு வங்காளத்தில் ஓர் ஊர். நாங்கள் சிறு வயது முதல் ஒன்றாக வளர்ந்தோம், ஒன்றாக விளையாடினோம், ஒன்றாகவே படிக்கவும் ஆரம்பித்தோம். சம்புவுக்குப் படிப்பு வரவில்லை. ஆகவே, அவனுடைய தந்தை அவனுடைய படிப்பை நிறுத்திவிட்டு விவசாயத்தில் அவனை ஈடுபடுத்தி விட்டார்.

எங்கள் குடும்பத்துக்கு நிறைய நிலபுலன்கள் இருந்தன. சம்புவின் தந்தை பசுபதி மண்டல்தான் அவற்றைக் கவனித்து வந்தார். அவருக்கும் சொந்தமாகக் கொஞ்சம் நிலம் இருந்தது. சொந்த நிலத்திலிருந்தும் அவருக்குப் போதிய வருவாய் கிடைத்தது. வசதியுடனும் கண்ணியமாகவும் வாழ்ந்து வந்தது சம்புவின் குடும்பம்.

நாட்டுப் பிரிவினைக்கு நாலைந்து வருடங்களுக்குப் பிறகு ஒரு நாள் தற்செயலாக ரஸ்தாவில் சம்புவைச் சந்தித்தேன்.

''என்ன சம்பு ! நீயுமா சொந்த ஊரை விட்டு விட்டு வந்து விட்டாய் ?'' என்று வியப்புடன் கேட்டேன்.

''என்ன செய்வதப்பா ? வர நேர்ந்து விட்டது.'' வருத்தம் தோய்ந்த குரலில் அவனிடமிருந்து பதில் வந்தது:

''நம் ஊரிலும் கலகம் ஏற்பட்டு விட்டது. என் தாயும் தந்தையும் மதவெறிக்குப் பலியாகி விட்டார்கள். வெறியர்கள் என்னையும் நையப் புடைத்துவிட்டு ஓடி விட்டார்கள். நான் மயக்கமடைந்து விழுந்து விட்டேன். தெருவிலிருந்த மற்ற இந்துக்கள் மயக்க நிலையிலேயே என்னைத் தூக்கிக் கொண்டு வந்து கல்கத்தா வரும் மெயிலில் வைத்து விட்டார்கள். இந்தியா வந்து சேர்ந்த பிறகுதான் என் மயக்கம் தெளிந்தது. நமக்குப் பிராப்தம் இவ்வளவுதான் என்று இங்கேயே தங்கி விட்டேன். சுய நினைவோடு இருந்திருந்தால் ஒரு போதும் சொந்த மண்ணை விட்டு விட்டு ஓடி வர மாட்டேன். இறந்தாலும் அங்கேயேதான் இறந்திருப்பேன்.''

''அது போகட்டும்; நீ எப்படிக் காலட்சேபம் செய்கிறாய் ?''

''நீ கேட்பதால் சொல்லுகிறேன்: ஆனால் கேட்டுவிட்டு வருத்தப்படாதே. நான் தள்ளு வண்டி இழுத்துப் பிழைக்கிறேன்''

## இசை நீளுகிறது!



''என்ன!'' வாய் விட்டுக் கூவிவிட்டேன் நான். சொந்த ஊரில் வீடு வாசல், மாடு கன்று, நிலபுலன்களுடன் கௌரவமாக வாழ்ந்து வந்த பசுபதி மண்டலின் பிள்ளை கல்கத்தா நகரத்தில் தள்ளு வண்டி இழுத்துப் பிழைக்கிறானா ? இந்த நிலை மாற்றத்தை நினைத்துப் பார்க்கவே பயமாயிருந்தது.

''என்ன ரஞ்சித்! பேச்சு மூச்சே இல்லையே ! நான்தான் முன்னமே சொன்னேனே, கேட்டால் நீ வருத்தப்படுவாய் என்று!''

''நீ தள்ளு வண்டி இழுப்பானேன் ? சர்க்காரில் அகதிகளுக்கென்று எவ்வளவோ விதமான உதவிகள் அளிக்கிறார்களே, அவைகளைப் பெற்றுக் கொண்டு ஏதாவது தொழிலைத் தொடங்கக் கூடாதா ?''

''எனக்கு அது பிடிக்கவில்லை. என்னை மன்னித்து விடு, ரஞ்சித் ! நான் உயிர் போனாலும் ஒருவரிடம் உதவி கேட்க மாட்டேன். நான் ஓர் அகதி என்று சொல்லிக் கொண்டு சர்க்கார் இலாக்காக்களில் கையேந்தி நிற்பது அவர்களுடைய தஸ்தாவேஜிகளி லெல்லாம்

என்னுடைய குடும்பச் சரித்திரத்தை எழுதி வைப்பது இதெல்லாம் எவ்வளவு அவமானம்! என் அப்பா உயிருடன் இருந்தவரையில் ஒருவரிடமும் கையேந்தி நின்றதில்லை. நான் அகதி என்று சொல்லிக் கொண்டு அவருடைய பெயரைக் கெடுக்க வேண்டுமா? வேண்டாம், வேண்டாம்! என் உடலில் சக்தி உள்ள வரையில் கூலி வேலை செய்தாவது வயிறு வளர்ப்பேனே ஒழிய யாரிடமும் — சர்க்காரிடமும்கூட — நான் உதவி கேட்க மாட்டேன் !''

சம்புவின் பேச்சு எனக்கு வியப்பளிக்கவில்லை. அவனுடைய சுபாவம் எனக்குத் தெரிந்ததுதான். அவன் மிகவும் ரோசக்காரன். சிறு வயதிலிருந்தே அவனுக்குத் தன்மான உணர்வு அதிகம். ஒரு சிறு சொல் கூடப் பொறுக்க மாட்டான் அவன். பகபதி மண்டலும் பெரிய மானி. உயிர் போனாலும் கௌரவத்தை இழக்கக் கூடாது என்ற கொள்கையுடையவர்.

எனக்கு அந்த ஓவியத்தின் நினைவு வந்தது. அதற்குக் கிடைக்கும் வசதிகளில் நூற்றில் ஒரு பங்கு கூடக் கிடைக்கவில்லையே சம்புவின் குடும்பத்துக்கு ! நினைக்க நினைக்க எனக்குச் சிரிப்புத்தான் வந்தது.

''என்ன ரஞ்சித் சிரிக்கிறாய்?'' என்று சம்பு கேட்டான்.

நான் விஷயத்தைச் சொன்னேன். அவனுக்கும் சிரிப்பு வந்து விட்டது. ''ஆமாம், ஆமாம், கொஞ்ச நாட்களுக்கு முன்னால் இங்கு ஓர் ஓவியன் வந்து ஓவியம் வரைந்து கொண்டிருந்ததாகக் கேள்விப்பட்டேன். அந்த ஓவியத்துக்கு இவ்வளவு அதிர்ஷ்டமா! சரியான பைத்தியக்கார உலகம் இது! உயிருள்ள மனிதர்களைக் கவனிக்க ஆளில்லை; உயிரில்லாத ஓவியங்களைத் தலைமேல் வைத்துக் கொண்டு கூத்தாடுகிறார்கள்!'' என்றான் அவனும்.

நான் ஓவியர் சங்கக் கட்டடத் திறப்பு விழாவுக்குப் போகவில்லை. ஆனால் அது பற்றிய விவரங்களைச் செய்திப் பத்திரிகைகளில் பார்த்தேன். விழா அமோகமாக நடந்ததாம். விழாவில் வரவேற்புரை நிகழ்த்திய வசந்தபுரி மகாராணியும், விழாவைத் தொடங்கிவைத்த மந்திரியும், தலைமை வகித்த தொழில் பிரமுகரும் ஒருமுகமாக ஓவியர் கதிர்சென்னையும் அவருடைய ஒப்பற்ற ஓவியத்தையும் பாராட்டிப் பேசினார்களாம்.

சில தினங்களுக்குப் பிறகு ஒரு நாள் செய்திப் பத்திரிகைகளில் திடுக்கிடச் செய்யும் செய்தியொன்று வெளியாகியது:

''நேற்றிரவு ஓவியக் காட்சியில் புகழ் பெற்ற ஓவியர் கதிர்சென்னின் ஓவியம் கத்தியால் குத்திக் கிழிக்கப்பட்டுச் சின்னபின்னமாகிக் கிடந்தது. இந்த அட்டூழியத்தைச் செய்தவன் யார் என்று தெரியவில்லை. நேற்றிரவு மழை பெய்து கொண்டிருந்ததால் காட்சி பார்க்கச் சிலரே வந்திருந்தனர். அங்கே காவலில் இருந்தவர்களும் அஜாக்கிரதையாக இருந்து விட்டதால்தான் இந்த நாச வேலை சாத்தியமாயிற்று.

''இக்காரியத்தைச் செய்தது யாராயிருக்கலாம் என்பது பற்றிப் பலவித ஹேஷ்யங்கள் உலவுகின்றன. கதிர்சென்னின் வளரும் புகழ் குறித்து அவரிடம் பொறாமை கொண்ட மற்ற சில ஓவியர்களின் தூண்டுதலாலேயே இந்தச் சம்பவம் நிகழ்ந்ததாகச் சிலர் சொல்லுகிறார்கள். வேறு சிலர் இது ஒரு பைத்தியக்காரனின் செய்கை என்று கருதுகிறார்கள். போலீசார் புலன் விசாரித்து வருகிறார்கள்....''

ஓவியர் சங்க அதிகாரிகளின் கவனக் குறைவைக் கண்டித்தும், ஓவியம் நஷ்டமானதால் கலையுலகுக்கு ஏற்பட்ட பெரும் இழப்புக்காக வருந்தியும் பத்திரிகைகளில் தலையங்கங்கள் வெளிவந்தன. இந்த நாச வேலைக்குக் காரணமானவனுக்குக் கடுந் தண்டனை வழங்க வேண்டியதன் அவசியத்தையும் அவை வற்புறுத்தின.

எனக்குச் சம்புவின் நினைவு வந்தது. இந்தச் சம்பவத்தில் அவன் சம்பந்தப்பட்டிருப்பான் என்று என் உள்ளுணர்வு கூறியது. அன்றிரவே அவனைப் பார்க்கச் சென்றேன்.

சம்பு குடிசையின் வாசலில் கைக் குழந்தையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

''என்ன சம்பு ! குழந்தையை நீ வைத்துக் கொண்டிருக்கிறாயே! மனைவிக்கு உடம்பு இன்னும் சரியாகவில்லையா?''

''அவள் போய் விட்டாளப்பா !'' பொங்கி வரும் துக்கத்தை அடக்கப் பற்களால் உதட்டைக் கடித்துக் கொண்டு பதில் சொன்னான். அவன் கண்களில் நீர் பெருகியது.

தந்தை அழுவதைப் பார்த்துக் குழந்தைகளும் அழத் தொடங்கி விட்டன.

நான் அவனுக்கு என்ன ஆறுதல் சொல்லுவேன்! சற்று நேரம் கழித்து வினவினேன்: ''எப்படியப்பா இறந்தாள் ?''

''பத்து நாட்களுக்கு முன்னால் பெரும் புயலுடன் மழை பெய்ததல்லவா ! அந்தப் புயலில் என் வீட்டின்மேல் போடப்பட்டிருந்த தகரத் தகடுகள் பறக்க ஆரம்பித்து விட்டன. அவற்றின்மேல் வைக்கப்பட்டிருந்த கற்கள் வீட்டுக்குள் விழுந்து விட்டன. அவற்றில் ஒன்று அவளுடைய தலையில் விழுந்து மண்டை உடைந்து போய் அவள் இறந்து விட்டாள் !''

கேட்கவே கஷ்டமாக இருந்தது, எனக்கு. எவ்வளவு பயங்கரமான மரணம் !

சம்புவின் மனைவி இறந்த செய்தியைக் கேட்டபிறகு ஓவியத்தைப் பற்றிப் பேச்செடுக்கத் தோன்ற வில்லை எனக்கு. ஆனால் அவனே என்னைக் கேட்டான், ''அந்த ஓவிய விஷயத்தைப் பத்திரிகையில் பார்த்திருப்பாயே !'' என்று.

''ஆமாம், அதைச் செய்தது....?''

''நான்தான் !''

''நீயா ? ஏன் அப்படிச் செய்தாய் ?''

சம்பு உடனே பதில் சொல்லவில்லை. ஏதோ யோசிப்பவன்போல் ஆகாயத்தை வெறித்துப் பார்த்தவாறு சற்று நேரம் இருந்து விட்டு மெல்லிய குரலில் பேச ஆரம்பித்தான்:

''ஏன்....? ஏன் என்ற கேள்விக்கு ஒரு வரியில் தெளிவாகப் பதில் சொல்ல முடியாது என்னால். நடந்ததை விவரமாகச் சொன்னால்



கணவன்: ரொம்ப ஜோர் புடவை! ஏது பணம்?

மனைவி : சேர்த்து வைத்திருந்தேன்.

கணவன் : சேர்க்கிறதற்கு ஏது பணம்?

மனைவி : மளிகைக் கடை பாக்கிக்காக மாதா மாதம் பணம் தருவீங்களே, அதைக் கடையில் கொடுக்காமல் பத்திரமாகச் சேர்த்து வைத்திருந்தேன்!

---

உனக்கு இந்தச் சம்பவத்தின் காரணம் ஒரு வேளை புரியலாம்.

''முந்தா நாள் மாலை நான் சீக்கிரமே வேலையிலிருந்து வந்து சமையல் செய்ய ஆரம்பித்தேன். அவள் இல்லாமல் எல்லாமே வெறிச்சென்றிருந்தது எனக்கு. பத்து வருடங்கள் என்னுடன் வாழ்ந்து, என் கஷ்டங்களில் பங்கெடுத்துக் கொண்டு என்னில் ஒரு பகுதியாக ஆகியிருந்தாள் அவள். மனைவி என்றால் அவளல்லவா மனைவி! எவ்வளவு கஷ்டம் நேர்ந்தபோதும் அவள் என்னை நொந்து கொண்டதில்லை, தன் மன உறுதியையும் இழந்ததில்லை. எனக்கு மனைவியாய், தோழியாய், ஆசிரியையாய், என் குழந்தைகளுக்கு ஓர் இலட்சியத்தாயாய்த் திகழ்ந்தாள் அவள். அவள் இந்த ஓட்டைக் குடிசைக்குள் சுவர்க்கத்தையே கொண்டு வந்திருந்தாள்.

''ஆனால் என்ன ஆச்சரியம்! அவள் இறந்து ஒரு வாரமே ஆகியிருந்தும் அவளுடைய அன்பு முகத்தைத் தெளிவாக நினைவுக்குக்கொண்டு வர முடியவில்லை என்றால்! அப்படிப்பட்ட பாவியா நான்? வேதனை என்னைக் கவ்வியது. அவளுடைய முகத்தை ஒரு தடவையாவது பார்க்க வேண்டும், உடனே பார்க்க வேண்டும் என்ற தாகம், வெறி என்னுள்ளே பிறந்தது. ஆனால் அவளை எப்படிப் பார்ப்பேன்? என்னிடம் அவள் புகைப்படமா இருக்கிறது?

''அப்போது எனக்கு அந்த ஓவியம் நினைவு வந்தது. பெண்ணைச் சமையலைக் கவனித்துக் கொள்ளச் சொல்லி விட்டு ஓவியர் சங்கக் கட்டடத்துக்கு ஓடினேன்.

''கண்காட்சி அரங்கில் கூட்டம் அதிகமில்லை. 'அந்த' ஓவியத்துக்கு முன்னால் இரண்டு பேர்கள் நின்று கொண்டு அதைப் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தார்கள். நானும் அவர்கள் அருகில் போய் ஓவியத்தைக் கூர்ந்து கவனித்தேன்.

''ஓவியன் கெட்டிக்காரன்தான். என் குடும்பத்தின் வறுமை அவ்வளவையும், எங்கள் வேதனை அத்தனையையும் எங்கள் திருப்தியடையாத ஆசாபாசங்களையும் ஒருங்கே திரட்டி ஓவியமாகத் தீட்டியிருந்தான். ஓவியத்தில் இருந்த என் மனைவியின் ஆசை முகத்தைப் பார்த்தவாறு மெய்ம்மறந்து நான் எவ்வளவு நேரம் நின்றேனோ, எனக்கே தெரியாது.....

''பக்கத்தில் இருந்தவர்கள் பேசிக் கொண்டார்கள்.

'ஆகா! என்ன உருக்கம் நிரம்பிய காட்சி!'

'ஆமாம், ஆமாம்! வறுமையின் விகவ ரூபத்தைப் பார்க்க எவ்வளவு வேதனையாயிருக்கிறது! உலகத்தில் இவ்வளவு கஷ்டங்கள் என்பதைப் பார்க்கும்போது நம் மனம் எவ்வளவு சங்கடப்படுகிறது! பாவம், அந்தக் கர்ப்பிணி! பாவம் அந்தக் குழந்தைகள்!.....'

''என் காதுகளுக்கு நாராசமாக இருந்தது அவர்களுடைய பேச்சு. நான் அவர்களைத் திரும்பிப் பார்த்தேன். ஓவியத்தைப் பாராட்டுவதன் மூலம் தங்கள் ரசனைத் திறமையையும், அதில் தீட்டப்பட்ட காட்சிக்கு இரங்குவதன் மூலம் தங்கள் தயாளசிந்தையையும் பறைசாற்றிக் கொண்டார்கள். அவர்களுடைய இரக்கத்துக்கு ஆளானது என்குடும்பம்!

''என் நெஞ்சு கொதித்தது. என் சுபாவந்தான் உனக்குத் தெரியுமே, ரஞ்சித்! நினைக்க நினைக்க எனக்கு ஆத்திரமாக இருந்தது. என் குடும்பத்தின் நிலையை இவ்வாறு பிரபலப்படுத்தி அதை மக்களின் இரக்கத்துக்கு ஆளாக்க ஓவியனுக்கு என்ன உரிமை இருக்கிறது? ஓவியனுக்கு மட்டும் அவனுடைய ஓவியத்தின் மேல் பூரண உரிமையா? அதன் கருப் பொருளாக அமைந்த என் குடும்பத்துக்கும் அதன் மேல் ஓரளவு உரிமை கிடையாதா?

''இது பற்றிச் சட்டம் என்ன சொல்கிறதோ, எனக்குத் தெரியாது. ஆனால் நான் அப்போதே தீர்மானித்து விட்டேன், என் குடும்பத்துக்கு யாருடைய இரக்கமும் தேவையில்லையென்று....

''அந்த அரங்கில் வேறு ஒருவரும் இல்லாத சமயத்தில் அந்த ஓவியத்தை என் பேனாக் கத்தியால் குத்திக் கிழித்துச் சின்னாபின்னமாக்கி விட்டு ஓடி வந்து விட்டேன். நான் செய்தது பைத்தியக்காரத்தனம் என்றுதானே நீயும் நினைக்கிறாய், ரஞ்சித்?''

நான் சொன்னேன், ''எனக்கும் சட்டம் தெரியாது சம்பு. ஆனால் ஒன்று மட்டும் சொல்லுவேன் — உன் உணர்ச்சிகள் உனக்குப் புனிதமானவை. அவற்றைப் புறக்கணிக்கவோ, அவமதிக்கவோ யாருக்கும் — ஓவியனுக்குங்கூட — உரிமையில்லை.....''

''நீயாவது என்னைப் புரிந்து கொண்டாயே, ரஞ்சித்!'' கண்களில் நன்றி நீராய்ப் பெருக என்னை இறுகத் தழுவிக் கொண்டான் சம்பு.



# கல்லுக்கு அடியில்..

கே. எஸ். பி.



இரண்டு நாட்களாகவே சுமதியின் மனநிலை சரியில்லை. எந்தக் காரியத்திலும் ஓர் அசாதாரண நிதானம், கவனக் குறைவு. பரபரக்கும் அவள் கரங்கள் சோம்பி நின்றன. இவ்வளவுக்கும் காரணம்—

பொழுது விடிந்தால் குழந்தை மதராஸ் போகிறாள். பிறந்த தினம் முதல் இந்த ஆறு வருஷங்களாய்க் குழந்தை ரஞ்சனி அவளை விட்டுப் பிரிந்ததில்லை. இரண்டு வருஷங்களாய் ரஞ்சனி 'சர்ச் பார்க்கில்' படிக்கிறாள். காலையில் ரிக்ஷாக்காரன் குழந்தையை அழைத்துப்போய் விட்டால் பகல் மூன்று மணிக்குத்தான் திரும்பி வருவாள். இதற்குள் சுமதியின் மனம் அல்லல்படும். நாலா திசையிலும் வண்டிப் போக்குவரத்து அதிகரித்து விட்ட மதராஸ் தெருக்களில் குழந்தை நல்லபடியாய்ப் போய்த் திரும்பி வர வேண்டுமே என்று சதா ஏங்குவாள்.

அவள் கணவன் கிருஷ்ணனின் போக்கே அலாதி. கம்பெனி விஷயமாய் அவன் சுற்றாத ஊர் இல்லை. காலையில் ஓர் ஊர் போனால் மாலை திரும்பி வந்து விடுவான். சுமதி குழந்தையைப் பற்றிச் சொல்லும்போதெல்லாம் அவன் சிரிப்பான்: 'உன் குழந்தைக்கு வயது ஆறு; ஞாபகம் இருக்கட்டும்; பூனையும் எலியுமா அவளைத் தூக்கிக் கொண்டு போய் விடும்?' சுமதி அவனைத் திரும்பிப் பார்ப்பாள். ''உங்களுக்குக் குழந்தையின் அருமை தெரியாது; ஊர் சுற்றத்தான் தெரியும்''

திடீரென்று கிருஷ்ணனுக்குப் பம்பாய்க்கு மாற்றலாகி விட்டது. உயர் பதவி வேறு. சுமதி பிறந்த தினத்திலிருந்து மதராஸ் எல்லையைத் தாண்டியதில்லை. ஓரிரு தரம் திருச்சிப் பக்கம் ஏதோ கல்யாணத்துக்குப் போயிருக்கிறாள். இது தவிர அவளுக்குத் தெரிந்த இடம் இரண்டுதான் — ஒன்று மயிலாப்பூர், கணவன் வீடு; மற்றொன்று அடையாறு பிறந்தகம்.

பம்பாய் மாற்றல் சுமதியைப் பொறுத்த வரையில் வேம்பாகக் கசந்தது.

''பம்பாயில் இடமே கிடைக்காதாம்'' என்றாள்.

''பரவாயில்லை; நமக்குச் சின்ன இடம் போதுமே!'' என்றான் கிருஷ்ணன்.

''குழந்தைக்குக் கஷ்டப்பட்டு இங்கே 'சர்ச் பார்க்கில்' இடம் பிடித்திருக்கிறேன்; மறுபடியும் அவளை அங்கே எப்படி மாற்றுவது?''

''பரவாயில்லை. அவள் இங்கேயே ஒரு வருஷம் படிக்கட்டும்; அடுத்த வருஷம் நல்ல ஸ்கூலில் அங்கு இடம் கிடைத்த பிறகு குழந்தையை அழைத்துக் கொள்ளலாம்.''

சுமதிக்கு இது புரிந்தாலும், தனிமையைப் பற்றி நினைத்தபோது அவளுக்குத் தலை சுற்றியது; கண்கள் இருண்டன.

''குழந்தையை விட்டு என்னால் எப்படித் தனியாக இருக்க முடியும்?'' என்று முரண்டு பிடித்தாள். கடைசியில் கிருஷ்ணன்தான் வென்றான்.

பம்பாயில் தமிழர்கள் வாழும் பகுதியில் சிறிய இடம் வாடகைக்குக் கிடைத்தது. குழந்தைக்கு விடுமுறையாதலால் அவளும் சுமதியோடு பம்பாய் வந்தாள்.

பம்பாய் நகரத்து வேகம் சுமதிக்கு அடியோடு பிடிக்கவில்லை. குடியிருப்பு இடத்தைப் பார்த்தவுடன் அவள் தலையில் அடித்துக்கொண்டாள்.

"இந்த மூன்று அறைகளுக்கா வாடகை நானூறு ரூபாய்?"

"ஆமாம், இது பம்பாய்; மயிலாப்பூரோ அடையாறோ இல்லை."

கிருஷ்ணன் பம்பாய் வந்த ஒரு வாரத்துக்குள் ஆபீஸ் வேலையாய் ஒரு தரம் மதராஸ், ஒரு தரம் டில்லி போய் வந்துவிட்டான்.

சுமதிக்கு வெறுப்பு:

"உங்களுக்குக் காலில் சக்கரம்; பகவான் உங்களை என்னவென்று படைத்தான்?"

"நான் என்ன செய்வேன்? என் உத்தியோகம் அப்படி!"

கிருஷ்ணன் அன்று ஆபீஸிலிருந்து வந்ததும் சொன்னான்: "நாளைப் பொறுத்து மறு நாள் காலை மதராஸ் போகிறேன்."

சுமதி யோசித்தாள்.

"குழந்தைக்கும் அடுத்த வாரம் ஸ்கூல் திறக்கிறார்கள். கூட அழைத்துப் போய் அடையாற்றில் விட்டு விடுங்கள். அம்மா பார்த்துக் கொள்வாள்."

"அதற்கென்ன, அவனுக்கும் ஒரு விமான டிக்கட் வாங்கி விடுகிறேன், குழந்தைக்கு அரை சார்ஜ்தான்!" — கிருஷ்ணன் சகஜமாகத்தான் சொன்னான். மனத்தில் ஒருவித சலனமும் இல்லை.

ஆனால் சுமதி...? குழந்தை மதராஸ் போய் விட்டால் அவள் கதி? எப்படிக் குழந்தையைப் பிரிந்திருப்பது? இவரும் ஆபீஸ் போய்விடுவாரே.

தனிமையை நினைக்கும்போதே அவள் ரத்தம் உறைந்தது. ஆறு வருஷங்களாக, குழந்தை பிறந்த தினம் முதல், ரஞ்சனியை அவள் பிரிந்ததில்லை. இப்போது படிப்புக்காகக் குழந்தை போய் விடுவான். அப்புறம் வருஷ விடுமுறையின்போதோ அல்லது கிறிஸ்துமஸ் லீவுக்கோதான் வரப்போகிறான். அவள் கண்கள் கலங்கின.

கிருஷ்ணன் நிதானமாகச் சொன்னான்:

"என்ன யோசனை? நான்தான் அடிக்கடி மதராஸ் போவேனே, குழந்தையைப் பார்த்து வருவேன்!"

சுமதிக்கு அழுகையோடு சிரிப்பும் வந்தது. "மண்ணாங்கட்டி! காலையில் போனால் சாயங்காலம் திரும்பி வரும் உங்களுக்குக் குழந்தையைப் பார்க்க நேரம் ஏது? அப்படிப் பார்த்தாலும் அவனோடு ஐந்து நிமிஷங்கள் இருக்கக் கூட உங்களுக்கு நேரம் போதாது. காலில் சக்கரத்தைக் கட்டிக் கொண்டு பறக்கும் ஜன்மம்தானே நீங்கள்!" என்றாள்.

சாந்தாக்ரூஸ் விமான நிலையம். மதராஸ் போகும் 'காரவெல்' விமானம் தயாராக நின்றது.

"அப்பா! விமானத்தில் போகும்போது நல்ல சுற்றுமாம்; நல்ல காற்றினால் அம்மா இந்த









மாத்திரையைச் சாப்பிடச் சொன்னுள்'' என்றுள் குழந்தை ரஞ்சனி.

கிருஷ்ணன் தலையில் அடித்துக் கொண்டான். ''கத்தப் பட்டிக்காடு உன் அம்மா; தலையும் சுற்றுது. காலும் சுற்றுது. வா!''

குழந்தைக்கு அது முதல் பயணம்தானே? அது அவனுக்குப் புரியவில்லை. வாரத்துக்கு ஒரு முறை பறந்து செல்லும் அவனுக்கு எல்லாம் சர்வ சகஜமாகி விட்டன.

விமானம் உயர உயரப் போய், மேகங்களுக்கும் அப்பால் பறந்து கொண்டிருந்தது. கீழே வெண் நுரைகளாய் மேகக் கூட்டங்கள் தெரிந்தன. ரஞ்சனி வாய் திறக்காமல் ஜன்னல் வழியே வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

அன்று முழுதும் சுமதிக்குக் காரியம் ஓடவில்லை. வெறும் மோரும் சாதத்தோடு சாப்பாட்டை முடித்துக் கொண்டாள்.

''குழந்தை மதராஸ் போயிருப்பாள்; பாட்டியோடு பம்பாயைப் பற்றிக் கதை கதையாய்ச் சொல்லிக் கொண்டிருப்பாள்!

''இவர் ஆபீஸ் விஷயமாய்ப் போயிருப்பார். சாயங்காலமே திரும்பி விடுவார். குழந்தையிடம் கூட அதிக நேரம் பேசி விளையாட மாட்டார்!''

நினைத்துக் கொண்டிருக்கும்போதே கதவு ஓசைப்பட்டது.

கிருஷ்ணன் திரும்பி விட்டான்.

''குழந்தை சௌக்கியமாகப் போனுளா? தலைச் சுற்றல் ஒன்றும் இல்லையே?—''

எப்போதும் போன்று ஏளனச் சிரிப்போடு கோட்டைக் கழற்றினுன் கிருஷ்ணன்.

''குழந்தைக்குப் புத்தகம், பை வாங்கக் காசு கொடுத்தீர்களா? ரிக்ஷாக்காரனிடம் வழக்கம்போல் வரச் சொல்லிச் சொன்னீர்களா?''

''எல்லாம் உங்க அம்மா சொல்லிக் கொள்வாள். எனக்கு நேரம் ஏது?''

சுமதி உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

''நீங்களும் உங்கள் உத்தியோகமும்! அது பாவம், அங்கே நானில்லாமல் எப்படித் துடிக்கிறதோ!''

''ஒரு துடிப்பும் இல்லை, சமர்த்தாக இருக்கிறுள்!''

''நீங்க பார்த்தேளா?''

பதில் இல்லை.

ஒரு மாதத்துக்குள் அவன் இரண்டு தரம் மதராஸ் போய் வந்து விட்டான். ஒரு தரம் குழந்தையைப் பார்க்கக் கூட நேரம் இல்லை. அவன் சென்ற நேரம் ரஞ்சனி பள்ளிக்கூடத்தில் இருந்தாள். பகல் விமானத்தில் அவன் திரும்பி விட்டான்.

சுமதி சாயங்காலம் எரிந்து விழுந்தாள்.

''அடுத்த வருஷம் முதலில் குழந்தைக்கு இங்கே ஒரு நல்ல ஸ்கூலில் ஏற்பாடு பண்ணி விட்டு வேறு காரியம் பாருங்கள்! என்னால் அவளை விட்டு விட்டு இந்த மாதிரி தனியே தவிக்க முடியாது!''

''ஏன், நான்தான் அடிக்கடி போகும் போதெல்லாம் அவளைப் பார்த்துக்கொள்கிறேனே!''

சுமதி தன் தோள் பட்டையில் இடித்துக் கொண்டாள்.

அடுத்த வாரம் அவன் மீண்டும் மதராஸ் கிளம்பினுன்.

சுமதி எச்சரித்தாள்:

''இந்தத் தரமாவது குழந்தையோடு ஒரு நாள் இருந்துவிட்டு, நாளை திரும்பி வாருங்கள். உங்கள் கம்பெனிக் கட்டிடம் ஒன்றும் கீழே விழுந்து விடாது!''

வழக்கமான புன்முறுவல். சுமதியின் மனம் கசிந்தது.

''உங்கள் மனம் பாருங்கல்; ஈரம் கிடையாது. தாய்க்குத்தானே தெரியும் பெற்ற அருமை!''

அவன் போனவுடன் சுமதி திடீரென்று கதவைச் சாத்திக் கொண்டாள். அவள் மனக் கண் முன்னுல் ரஞ்சனி நின்றுள். 'குழந்தை தாயின் அன்பு இல்லாமல் எப்படித் தவிக்கிறுளோ? இவருக்கு ஒரு பேச்சு, விளையாட்டு ஒன்றும் தெரியாது. கம்பெனி, உத்தியோகம், விமானப் பயணம் இது மூன்று தானே இவருக்குப் பிடித்தது?'

அன்று சாயங்காலம் கிருஷ்ணன் திரும்பி வரவில்லை. சுமதி பெருமூச்சு விட்டாள்.

'நல்ல வேளை, இந்தத் தரம் ஒரு நாள் தங்கி விட்டு வருகிறுர் போலிருக்கிறது! என்ன

கர்ப்பம் ஏற்பட்டுவிடுமே என்று அச்சமின்றி இல்லற வாழ்க்கையை இன்பமாக அனுபவியுங்கள்.

குடும்பக் கட்டுப்பாட்டிற்கு மிகவும் பத்திரமான முறை ஆண்களுக்கு இப்பொழுது உண்டு. அதுதான் **நிரோத்**

ஆடவர்களின் உபயோகத்திற்கு உகந்த உயர்தரமான குடும்பக் கட்டுப்பாடு சாதனம்.

# நிரோத்



குடும்பக் கட்டுப்பாட்டிற்கு

மூன்றின் விலை 15 பைசா
அரசாங்க ஆதரவு விலையில்
கிடைக்கிறது.

davp 69/106

இருந்தாலும் இவருக்கும் தோன்றாதா என்ன? குழந்தையோடு ஒரு நாளாவது கழிக்க வேண்டும் என்று!''

இரவு மணி ஒன்று. சுமதி அரைத் தூக்கத்தில் இருந்தாள். 'ரஞ்சனி... ரஞ்சனி...' — ஒரு முணுமுணுப்பு.

கதவு 'டிரிங்' என்று அலறியது. இரவு நிசப்தத்தில் மின்சார மணி தெளிவாகக் கேட்டது.

'இந்த நேரத்தில் யார்?'

தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கதவைத் திறந்தாள். எதிரே கிருஷ்ணன், ரஞ்சனி, ஒரு கிறிஸ்துவப் பாதிரியார்!

சுமதிக்கு ஒன்றுமே புரியவில்லை.

ரஞ்சனி அம்மாவைப் பார்த்துச் சிரித்தாள்.

கிருஷ்ணன் சொன்னான்—

''ஏர் இந்தியா விமானம் வந்தது: அதில் வந்து விட்டேன், குழந்தையோடு!''

''ஸ்கூல் லீவா என்னடி ரஞ்சனி?''

''இல்லேம்மா!''

கிருஷ்ணன் சிரித்துக் கொண்டே சொன்னான்: ''போன தரம் மதராஸ் போன போதே இவரைச் சந்தித்தேன்.'' — எதிரே பாதிரியார் நின்றிருந்தார்.

''குழந்தை தனியே மதராஸில் படிக்கிறாள் என்றேன். உடனே இவர் இங்கே அதே மாதிரிக் கான்வென்டில் இடம் ஏற்பாடு செய்து தருகிறேன் என்றார். தற்செயலாய் இவரை இன்று பகல் மதராஸில் சந்தித்தேன். வேறு வேலையாய் பம்பாய் வந்திருக்கிறார் இவர். நாளை முதல் ரஞ்சனி இங்கே இருக்கும் பெரிய ஸ்கூலுக்குப் போகலாம். அட்மிஷனைப் பற்றிக் கவலையில்லை, இவர் எல்லா ஏற்பாடும் செய்து விட்டார்!''

எதிரே நின்ற கணவனையும் பாதிரியாரையும் மாறி மாறிப் பார்த்தாள் சுமதி.

''இவர் இந்த ஊரிலேயே பெரிய கான்வென்டில் ஏற்பாடு செய்திருக்கிறார். ஸ்கூல் நிர்வாகத்தில் இவரும் ஒரு டிரஸ்டியாம்!''

கிருஷ்ணன் பாதிரியாரை வழியனுப்பி விட்டு வந்தான்.

சுமதியின் மனத்தில் சுமை இறங்கிக் கொண்டிருந்தது.

ரஞ்சனியே பேச ஆரம்பித்தாள்: ''அப்பா ஒவ்வொரு தரம் மதராஸ் வரும் போதும் ரொம்ப மனக் கஷ்டப்படுவார், அம்மா, நான் அங்கே தனியே இருக்கிறேனென்று! எப்படியும் இங்கே அட்மிஷன் கிடைக்க ஆளைப் பிடித்து ஏற்பாடு பண்ணி விட்டார்!'' — குழந்தை கலீரென்று சிரித்தாள்.

சுமதி விடவில்லை.

''ஆமாம், உங்களுக்கு இதற்கெல்லாம் நேரம் ஏது? பாறாங்கல் மாதிரி தானே உங்கள் மனம். குழந்தையைப் பற்றி உங்களுக்கு இவ்வளவு அக்கறை எப்போது வந்தது?''

அந்த இரவு வேளையிலும் கிருஷ்ணன் அமைதியாகச் சிரித்தார்.

''பாறாங்கல்லின் அடியில்தானே ஈரம் கசிகிறது...?''

சுமதிக்குப் புரிந்துவிட்டது!

# அற்புதங்கள் இன்றும் நிகழ்கின்றன

'அற்புதங்கள் இன்றும் நடைபெறுகின்றன' என்ற இந்த நூல் தனிச் சிறப்பு பொருந்திய நாவல். நாவல் என்று சொன்னாலும் இது கற்பனையில் புனைந்ததல்ல. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் தந்த வாக்குறுதிக்கேற்ப, இந்தக் கலிகாலத்தில் இன்றளவும் தம் மெய்யடியாரைக் காப்பாற்றுவதைக் கண்ணாரக் கண்டவர் இந் நூலாசிரியரான ஸ்ரீ திலீப் குமார் ராய் அவர்கள். இசைக் கலைஞராகவும், இலக்கியகர்த்தராகவும், பரம பாகவதராகவும் பெயர் கொண்டவர் ஸ்ரீ டி. கே. ராய். கண்ணன் தன் பக்தரை மறைந்திருந்து காப்பது மட்டுமின்றி, அற்புதங்களை நிகழ்த்தி ஸ்தூலமாகத் தனது அநுக்கிரகத்தைக் காட்டியிருப்பதைப் பல்வேறு சமயங்களில் அழுத்தம் திருத்தமாகக் கண்டவர் ஸ்ரீ டி. கே. ராய். நாஸ்திகமும், பகுத்தறிவு, பகுத்தறிவு என்று ஓயாமல் கூறும் 'இரண்டுங் கெட்டான் பக்தி'யும் பரவிவிட்ட இன்று, தாம் அறிந்த தெய்விக அற்புதங்களைச் சுவை நிறைந்த நாவல் போல் உருவாக்கித் தந்திருக்கிறார் அவர். மொழியின் கவித்துவ அழகும், கருத்துக்களின் நுண்மையும், உணர்வின் அடர்த்தியும் ஒன்று சேர்ந்து உருவான நூல் இது. இயற்கை விதிகளுக்கும், ஸையன்ஸுக்கும் அப்பாற்பட்ட ஸர்வேசுவரன் தன் கருணையின் மகிமையால் அடியாரை அற்புதம் செய்து ஆட்கொள்ளும் கட்டங்களில் விம்மி விதிர் விதிர்த்து விடுகிறோம். இது போன்ற நூல்களைப் படித்து நவயுக இளைஞருலகம் பயனுறவும் பகவானே தான் ஏதேனும் அற்புதம் புரிய வேண்டும்!



திலீப்குமார் ராய்

**Miracles do still happen By Dilipkumar Roy Available at Harikrishna Mandir, Poona - 16; Price Rs. 9-50.**





# ஏட்டுச்சுவடி முதல் எலும்புக்கூடு வரை....

இலக்கியங்களில் கேட்டு ரசித்து மகிழ்வதோடு நின்று விடாமல் தமிழரின் பொன்னான சரித்திர காலத்தை, "தமிழர் வரலாற்றுக் கண்காட்சி" மூலம் நம் கண் முன்னே நிறுத்துகிறார் சிவகாசி அன்பர் விஜய — வேங்கட — வணங்காமுடி ஓரகண்டி கனகய்யா நாயுடு அவர்கள்.

சேர, சோழ பாண்டிய மன்னர்கள் ஆண்ட காலத்திய பொருட்களைச் சேகரித்துச் சிவகாசி நகரில் 'சரஸ்வதி ஹால்' எனப் பெயர் பூண்ட தமது இல்லத்தில் வைத்துப் பாதுகாத்து வருகிறார். ஒரு பெருங்குழுவோ அல்லது அரசாங்கமோ சாதிக்க வேண்டியதைத் தனி ஒரு மனிதர் சாதித்துள்ளார் என்றால் அதைக் கண்டு பாராட்டாமல் எப்படி இருப்பது ?

தொல்காப்பியம் முதல், பிற்காலப் பிரபந்தங்கள், மருத்துவம் முதலிய ஆயிரத்து இருநூறு ஏட்டுச் சுவடிகள், சிலம்பு, வீரக் கழல், பொன் நகைகள், நவரத்தினக் கற்கள்; கிரேக்க நாணயங்கள், அசோகர் காலத்திய நாணயங்கள், பலவித போர்க் கருவிகள், பீரங்கிக் குண்டுகள், புத்தர் முதலிய உருவச் சிலைகள், அக்காலப் பாத்திரங்கள், மர உரி, மற்றும் நுண்ணிய ஆடைகள், பண்டைய நாகரிகமான— இறந்தோரைப் புதைக்கும் தாழிகள், அதனுள் வைத்த பொருள்கள், கடற் பொருள்கள், பறவைகளின் அலகுகள், மிருகங்களின் கொம்புகள், எலும்புக் கூடுகள், பல நாட்டு ரூபாய் நோட்டுகள், தபால் தலைகள், பல்வேறு கற்கள், மண் வகைகள் முதலியவற்றைக் காணுந்தோறும் நமது வரலாற்றுச் சிறப்பை எண்ணி இறும்பூதெய்துகின்றோம்.

தமிழகப் பேரறிஞர்கள் பலரும் அப் பொருட்காட்சியைக் கண்டு பாராட்டி இருக்கிறார்கள்.

இக்காட்சியைக் கண்ட தமிழறிஞர் கி. வா. ஜ. அவர்கள் —

"பலவிடத்தும் சென்று கிடைத்ததற்கரிய
பண்டம் பாங்காக ஆய்ந்தெடுத்த
பான்மையினைப் புகழ்க்கோ
நிலவுமிந்தப் பொருள் தொகுக்கப்
பொருள் செலவிட்டுற்ற நீள்முயற்சியினைப்
புகழ்க்கோ ஓரகண்டிச் செல்வர்
குலவுமின்பம்கொண்ட கனகய்யாவாம்குரிசில்
கூரறிவும் முயற்சியுமாய்க்
கோத்தெடுத்த பொருள்கள்
நிலவுலகில் பலகாணத் தக்கவையாம்
இவர்தம் நீண்டநெடுந் தாளாண்மை
வாழிய வாழியவே !"

எனப் பாடி மகிழ்ந்துள்ளார்.

எழுபத்தெட்டு வயது நிரம்பிய திரு ஓரகண்டி கனகய்யா நாயுடு அவர்கள் இக் கலைக் காட்சிக்காக முப்பதாயிரம் ரூபாய்க்கு மேல் செலவிட்டிருக்கிறார். விஜய நகர மன்னர் கிருஷ்ணதேவராயரின்வமிசாவழியினர் என்று கூறிக் கொள்ளும் இவருக்கு மனைவியும் இரு குமாரர்களும் இருக்கிறார்கள். குழந்தைப் பருவத்தில் தமது அன்னை வீரலட்சுமி அம்மையார் வரலாற்றுக் கதைகளைக் கூறக் கேட்ட இவருக்குப் பதினைந்து வயதிலேயே இப்பொருட்களைச் சேகரிக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியதாம். சிவகாசி சப்-கலெக்டர் அலுவலகத்தில் தலைமை எழுத்தராகப் பணியாற்றும்போது கிடைத்த விடுமுறைகளில் வெளி இடங்கள் சென்று கலைப் பொருட்கள் சேகரித்தார். கொ.மா. கோதண்டம்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor:; T. Sadasivam

